இலவசம் Eelamurasu-Canada

# ஈழமுரசு
கனடா

முரசு:15 இதழ்:536 பெப்ரவரி 17 முதல் பெப்ரவரி 24 - 2010 வரை




## மகிந்தவின் அரசியலும் இராணுவத்திற்குள் ஏற்பட்டுள்ள முரண்பாடுகளும்

## ரஷ்யாவின் சிறிலங்காவுடனான ஒப்பந்தம் அடுத்த குளிர்கால போருக்கான ஒத்திகையா?

## சர்வதேசத்தின் வாய்ப்பை இழக்கும் சிறிலங்கா - பிரித்தானியா எச்சரிக்கை

# SELL AND BUY THROUGH US
## AND GET A SPECIAL PROMOTIONAL COMMISSION RATE

Century 21® Titans Realty Inc.


Sureshkumar Rajasingham
Sales Representatative
416.520.0667


Samkumar Murugesu
Broker of Record
416.726.4277


Vejai Omkar
Broker
647.201.2617


Marlene Miguel
Sales Representatative
416.824.7900


Laurent Gunaeswararajah
Sales Representative
647.686.6893


Sudharshan Muthucumaraswamy, CGA
Sales Representative
416.567.6209

### Brampton

Bedroom 3 + 1
Washroom 3
289,900

Gorgeous Semi in High Demand Location. Base. Apt with Sep. Entrance. Close to school, park + Hospital. All appliances included.

### Morningside & Galloway

Bedroom 4
Washroom 3
179,900

End Unit, Spacious Condo Townhouse like Semi. Low Maint. Fee, Large Fin-Basement. Good for Renos & Investors. Priced to Sell.

### Lawrence & Brimely

Bedroom 3 + 2
Washroom 2
364,900

Detached Bungalow, Base Apt, Sep Entrance. XL Lot w/ Fruit Trees. Close to Schools, Shopping, TTC, Newer Roof, Windows. 6 Appliances.

### Stouffville

Bedroom 4
Washroom 3
534,900

Immaculate Home in Stouffville near 9th Line. Det. 4 Bedroom, Double Door Garage, Hardwood flooring, Stainless Steel Appliances Included.

### Bayview & Major Mack

Bedroom 3
Washroom 3
439,900

Freehold townhouse in Richmond Hill & Close to Prestigious Bayview Secondary School. Pay no Maintenance Fee

### Pickering

Bedroom 4
Washroom 3
524,900

Immaculate Newer Detached 4 Bedroom house. Main floor has a bedroom + full washroom. Luxurious kitchen full of granite.

### Middlefeild & Finch

Bedroom 2 + 1
Washroom 2
234,900

Beautiful Condo, One of the Largest in the Complex, No units means no disturbance, Lots of natural lighting! A Must see.

### Bellamy & Eglinton

Bedroom 3 + 2
Washroom 2
389,900

A must see Bungalow in a quiet neighborhood!! Basement apartment with seperate entrance.

## WE HAVE QUALIFIED BUYERS TO BUY YOUR HOME IMMEDIATELY! CALL US TODAY

## WELCOMING NEW & EXPERIENCED REAL ESTATE AGENTS

Join Century 21 Titans and Expect More

Expand your possibilities by becoming the best you can and keep the most of what you earn.

**Office 416 289 2155 Fax 416 289 2156**
2100 Ellesemere Road Unit 100 Scarborough, Ontario M1H 3B7

ஈழமுரசு கனடா
EELAMURASU CANADA
நிர்வாகி
நிசாந்தன்
பிரதம ஆசிரியர்
ரஞ்சன்
ஆசிரியர் குழு
ஐ.சண்முகநாதன்
ஈசன், செல்வராஜா
சிவா பரஞ்சோதி
அலுவலக நிர்வாகம்
இ.கந்தசாமி
வரைகலை
அனு கிராபிக்ஸ்
அலுவலகம்
2625 EGLINTON AVE EAST #2
SCARBOROUGH ,ON.M1K 2S2
தொலைபேசி / Telephone
416-291-7474
Cell:416•857•3941
தொலைநகல்/ Fax
416•291•7472
மின் அஞ்சல்/ Email
Eelamurasucanada@yahoo.com
மொன்றியல்
514-944-9315
அனைத்துலக அலுவலகங்கள்
பிரான்ஸ்
00 31 40 05 95 15
பிரித்தானியா
078 8679 0198
சுவிஸ்
079 828 6871
ஜேர்மனி
0208 205 99 103
இத்தாலி
091 6824056
டென்மார்க்
75366279
நோர்வே
22 425 527
நெதர்லாந்து
076 5425804
அவுஸ்திரேலியா
61 3 8802 8368



"நாம் இனத்துவேசிகள் அல்லர் போர்வெறிகொண்ட வன்முறையாளர்களும் அல்லர் நாம் சிங்கள மக்களை எதிரிகளாகவோ, விரோதிகளாகவோ கருதவில்லை. சனநாயக அரசியல் மரபிற்கு நாம் விரோதமானவர்கள் அல்லர். எமது மக்களின் அடிப்படையான சனநாயக அரசியல் உரிமைகளுக்காகவே நாம் போராடி வருகின்றோம்."

தமிழீழத் தேசியத்தலைவர் மேதகு வே.பிரபாகரன்



# சர்வதேசத்தின் வாய்ப்பை இழக்கும் சிறீலங்கா

# பிரித்தானியா எச்சரிக்கை

சி(12.02.2010, வெள்ளிக்கிழமை)
றீலங்கா ஜனாதிபதிக்கான தேர்தலில் எதிர்த்துப் போட்டியிட்ட எதிர்க்கட்சி வேட்பாளரும் முன்னாள் படைத் தளபதியுமான ஜெனரல் சரத் பொன்சேகா, கைது செய்யப்பட்டதும், கைது செய்யப்பட்ட முறையும் ஐக்கிய நாடுகள் சபை முதல் சர்வதேச நாடுகள் வரை பல வாதப்பிரதிவாதங்களை தோற்றுவித்துள்ளன.

கடந்த செவ்வாய்கிழமை இரவு, சரத் பொன்சேகா கைது செய்யப்பட்டு தரக்குறைவாக இழுத்துச் செல்லப்பட்டதற்கு எதிர்ப்புத் தெரிவித்து அவரது ஆதரவாளர்கள் கொழும்பு நகரில் பயங்கர கலவரத்தில் ஈடுபட்டனர். நகரின் பல இடங்களில் பொன்சேகாவின் ஆதரவாளர்களுக்கும், ஆளும் கட்சி ஆதரவாளர்களுக்கும் இடையே கைகலப்பு, மோதல் ஏற்பட்டது. அதிரடிப் படைக் காவல்துறையினர் கண்ணீர் புகைக் குண்டுகளை வீசியும், தண்ணீரைப் பீய்ச்சியடித்தும், தடியடி நடத்தியும் ஆர்ப்பாட்டக்காரர்களைக் கலைத்தனர்.

சிறீலங்காவின் இந்த அதிரடி நடவடிக்கை தொடர்பாக அருகிலுள்ள இந்தியா மௌனம் காத்துவரும் நிலையில், பிரித்தானிய அரசு சிறீலங்காவிற்குக் கடிதம்ஒன்றை அனுப்பி வைத்துள்ளது. பிரித்தானிய வெளிவிவகார அமைச்சர் டேவிட் மிலிபண்ட் அவர்களால் அனுப்பப்பட்ட அக்கடிதத்தில் சிறீலங்காவின் இவ்வாறான நடவடிக்கைகள் தொடருமாயின், அது சர்வதேசத்தின் வாய்ப்பை இழக்கும் என்று எச்சரிக்கப்பட்டுள்ளது.

இது தொடர்பாக வெளிவிவகார அமைச்சர் டேவிட் மிலிபண்ட் அவர்கள் அனுப்பி வைத்துள்ள கடிதத்தில் தெரிவித்துள்ளதாவது, கடந்த ஜனாதிபதித் தேர்தலில் ஊடகவியலாளர்கள் தாக்கப்பட்டதுடன், எதிர்க்கட்சி ஆதரவாளர்களுக்கு எதிரான தாக்குதல்களும் நிகழ்ந்துள்ளன. அதன் தொடர்ச்சியாக இந்த வாரத் தொடக்கத்தில் மகிந்தவிற்கு சவலாக நின்ற சரத் பொன்சேகா கைது செய்யபர்பட்டுள்ளார். இந்த நிகழ்வுகள் சிறீலங்காவில் அபிவிருத்தியையும், முன்னேற்றத்தையும் எதிர்பார்த்திருக்கும் நாடுகளுக்கு பெருத்த கவலையைக் கொடுத்துள்ளது.

சிறீலங்கா அரசு ஒரு திறந்த, முற்றான ஒரு விசாரணையை இச்செயல்களுக்கு எதிராக ஏற்படுத்துவதும், ஊடக சுதந்திரத்தை உறுதிப்படுத்துவதும், கைது செய்யப்படுபவர்கள் மீது சட்டத்தின் அடிப்படையில் மட்டுமே நடவடிக்கை எடுப்பதும், அத்துடன், ஒரு அமைதியான சூழலை ஏற்படுத்துவதுடன் எதிர்க்கட்சி வாக்களர்கள் கூட பாதுகாப்பாக இருப்பதற்குமான நடவடிக்கையை எடுப்பதே அரசின் இன்றைய கடமையாகும்.

மகிந்த ராஜபக்சவிற்கு வழங்கப்பட்ட ஜனாதிபதி வாய்ப்பானது, நாட்டில் ஒரு நிரந்தர அமைதியையும் தேசிய ஒருமைப்பாட்டையும் வளர்த்தெடுப்பதற்கான ஆணையாகும். அதாவது, விடுதலைப் புலிகளுக்கும் அரசுக்கும் இடையே நிகழ்ந்த போராட்டத்திற்கான அடிப்படைக் காரணங்களை அறிந்து அதற்குரிய முழுமையான அரசியல் தீர்வை ஏற்படுத்துவதே ஆகும்.

இதுபற்றி பிரித்தானியப் பிரதமர் மகிந்த ராஜபக்சவிற்கு எழுதியதுடன், தானும் வெளிவிகார அமைச்சர் போகல்லாகமவுடன் தொடர்புகொண்டதாகவும், இதன்மூலம் நாம் அவர்களுக்கு இந்த விடயம் பாரதூரமானது என்றும் இதன்மூலம் அவர்கள் சர்வதேச வாய்ப்புக்களை இழக்க நேரிடும் என்றும் கூறியதாகவும் அந்தக் கடிதத்தில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

அத்துடன், எதிர்வரும் சிறீலங்கா நாடாளுமன்றத் தேர்தல், ஒவ்வொருவரும் தங்கள் பிரதிநிதிகளை தேர்ந்தெடுப்பதற்கு வழிவகுக்க வேண்டும் எனவும், சுதந்திரமாகவும், வன்முறைகளற்ற நிலையிலும் தங்கள் பிரதிநிதிகளை தேர்ந்தெடுக்கும் தேர்தலாக அது அமைய வேண்டும் எனவும் வெளிவிவகார அமைச்சர் டேவிட் மிலிபண்ட் தனது கடிதத்தில் குறிப்பிட்டுள்ளார்.



சரத் பொன்சேகா கைதினால் மீண்டும் களேபரமாகியது சிறீலங்கா

"மாண்ட வீரர் கனவு பலிக்கும் மகிழ்ச்சிக் கடலில் தமிழ் மண் குளிக்கும்"




**CATERING • TAKEOUT • BAKERY**

*for taste & flavour of thamil Eelam*

# PARTY SPECIAL

*Order for 10 people or more*

Pittu Briyani/String Briyani
Fried Rice/ Briyani Rice
Any Choice of Meat Curry
Egg Plant Pickle
Fried Smelt Fish/Any Patties
Cashews Curry/Potato Deville
Dessert ............................$ 6.95(normal)

Chicken "65"/Chicken Wings
Shrimp Deville
Red Onion Sambal & Butter Chili..................$ 9.95(special)

*Singapore Noodle ( or Malaysian Noodle $1 more)*

With Shrimp And Any Meat
Potato Deville
Egg Plant pickle
Samosa/Any Patties
Dessert ..................................................$ 7.95(normal)

Chicken wings
Chili Chicken/Ginger Chicken ......................$10.95(special)

Extra Any Meat Curry/
Fried King Fish.....................plus....$2.00(Christmas special)

Vegetarian

Pittu Briyani/String Briyani
Singapore Noodle/Rice Briyani
Egg Plant Pickle
Mixed Vegetable.
Potato Deville
Onion/Tomato Hot Curry
Red Onion Salad & Butter Chili
Dessert..................................................$ 7.95

*Limited Time Offer*

***Masala Dosai......................$3.95***




**Monday Special**

KothuRotti........~~6.95~~ 5.95

**Tuesday Special**

Masala Dosai....~~4.95~~ 3.95

**Wednesday Special**

Singapore Noodles ......
~~7.45~~ 6.45

**Thursday Special**

Pittu Briyani......
~~6.95~~.......5.95

Anugraphics 416-857-3941

**9590 McCowan Road , Unit # 3,4,5(McCowan / Buroak)**
**4800 Sheppard Ave East # 1,2,3,4 (McCowan /Sheppard)**
**Call: 416-298-BABU (416-298-2228)**

# ஈழமுரசு

## அறுவடை

‘நரிக்கு நாட்டாமை கொடுத்தால் கிடைக்கு இரண்டு வெள்ளாடு கேட்கும்’ என்பார்கள். மீண்டும் ஆட்சிப் பதவியைப் பிடித்துக்கொண்டுள்ள மகிந்த ராஜபக்ச தனது வல்லாதிக்கத்தை காண்பிக்கத் தொடங்கியுள்ளார். தமிழ் மக்கள் மீதான தனது வல்லாதிக்கம் முடிவடைந்துவிட்ட (?) நிலையில், எதிர்க்கட்சி மீது தனது பலப் பிரயோகத்தைக் காண்பிக்கத் தொடங்கியுள்ளார். இதனால் நாடு ஒரு சர்வாதிகார ஆட்சிக்குள் சென்றுகொண்டிருக்கின்றது என்ற நிலையை ஏற்படுத்தியிருக்கின்றது.

‘ஒரே நாடு’ என்ற கொள்கையில் இருந்து, தற்போது ‘ஒரே ஆட்சி’ என்ற சிந்தனைக்குள் மகிந்த அரசு நுழைகின்றமையையே மகிந்த அரசின் நடவடிக்கைகள் எடுத்துக்காட்டுகின்றன. எதிர்க்கட்சிகளை ‘எதிரிக் கட்சிகள்’ என வர்ணித்துவந்த மகிந்த ராஜபக்ச, அந்த எதிரிக் கட்சிகளை இப்போது களையெடுக்கத் தொடங்கிவிட்டார்.

இதனால், கொழும்பு மீண்டும் அதிரத் தொடங்கியிருக்கின்றது. தமிழ் மக்களுக்கு எதிரான கலவரங்களாலும், வன்முறைகளாலும் ஒருகாலத்தில் அதிர்ந்த தலைநகர், அரச அடக்கு முறையாளர்களுக்கும், சிங்கள எதிர்க் கட்சியினருக்கும் இடையிலான வன்முறையால் அதிரத் தொடங்கியிருக்கின்றது. எதிர்க்கட்சியினர் மீதான இவர்களின் அடக்குமுறை, இப்போது இரு பிரதான கட்சிகளுக்கும் இடையிலான மோதலாக உருமாறி வருகின்றது. எதிர்க்கட்சிகள் மீது அடக்குமுறையை அரசு ஏவிவிட்டுள்ள நிலையில், ஆளும்கட்சி - எதிர்க்கட்சி ஆதரவாளர்கள் இடையேயான மோதல்களை அதிகரித்துள்ளனர். இதனால், இந்த வன்முறைகள் இன்னும் மோசமான கட்டத்தை அடையலாம் என்றே எதிர்பார்க்கப்படுகின்றது.

தங்கள் இனத்தின் மீதே துப்பாக்கியை நீட்டிவேண்டிய ஒரு இக்கட்டான நிலை சிங்களப் பாதுகாவலர்களுக்கு மீண்டும் ஏற்பட்டிருக்கின்றது. ஒரு காலத்தில் இலட்சக்கணக்கான சிங்கள இளைஞர்களை கொன்று வீசியவர்களுக்கு, தமிழினத்தை ஈவிரக்கமின்றி கொன்றொழித்தவர்களுக்கு இந்த வன்முறையை அடக்குவதென்பது மிகவும் சாதாரணம். இதற்கான பல்வேறு முன்னேற்பாடுகளை அரசு செய்துகொண்டுவிட்டதாகவும் எதிர்க் கட்சிகள் குற்றம்சாட்டுகின்றன.

‘சிங்கள இனத்திற்கு எதிராக ஒருகாலத்தில் போரிட்ட கருணாவை அரியாசனத்தில் அமர்த்திவிட்டு, சிங்கள மக்களின் எதிர்கால நலனிற்காக தமிழர்களை கொன்றொழித்த சரத் பொன்சேகாவை காலில்போட்டு நாயைவிடக் கேவலாமாக நசுக்கியிருக்கின்றார்கள்’ என்று அவர்கள் தமது வேதனையைக் கொட்டியிருக்கின்றார்கள். இது பல அனுபவங்களை சரத் பொன்சேகாக்களுக்கு கற்றுக்கொடுத்திருக்கும்.

யாழ்குடாவை ஆக்கிரமித்து, அதன் பின்னர் பல நூற்றுக் கணக்கான இளைஞர், யுவதிகள் கடத்தப்பட்டார்கள், கொடூரமாகக் கொல்லப்பட்டார்கள், காணாமல் போனார்கள். இன்றுவரை காணாமல் போனவர்கள் என்ன ஆனார்கள் என்பது மர்மமாகவே இருக்கின்றது. அவர்களின் பெற்றோரும் உறவுகளும் இன்னும் கண்ணீருடன் மீண்டும் அவர்கள் கிடைக்கமாட்டார்களா என்ற ஏக்கத்துடனேயே காலத்தை நகர்த்துகின்றார்கள். இவர்கள் காணாமல்போனபோதும், கொல்லப்பட்டபோதும் யாழ்குடாவின் இராணுவத் தளபதியாக இருந்து கட்டளைகளை வழங்கியவர் இந்த சரத் பொன்சேகாவே.

கடந்த செவ்வாய்கிழமை நள்ளிரவு சரத் பொன்சேகா அதிரடியாகக் கைது செய்யப்பட்டபோது, ‘தனது கணவர் கைது செய்யப்படவில்லை, கடத்தப்பட்டிருக்கிறார்’ என்று அழுது புலம்பி முறையிட்டார், பொன்சேகாவின் துணைவி அனமா. ‘அலுவலகத்தை உடைத்துக் கொண்டு உள்ளே புகுந்த இராணுவத்தினர், கேட்டுக் கேள்வியின்றி, ஜெனரல் பொன்சேகாவை தரதரவென பலவந்தமாக இழுத்துச் சென்றனர். முன்னர் 'பயங்கரவாதிகள்` என்ற பெயரில் சந்தேகநபரை இழுத்துச் செல்வது போல அவரைக் கொண்டு சென்றனர்’ என்றார் மனோ கணேசன்.

சரத் பொன்சேகா மீது நடைபெற்ற தற்கொலைத் தாக்குதலை கண்டித்து பயங்கரவாத நடவடிக்கை என வர்ணித்த உலகம், நோய்வாய்ப்பட்டுள்ள சரத் பொன்சேகா மிக மோசமாகத் தாக்கப்பட்டு அடித்து இழுத்துச் செல்லப்பட்டதை மௌனமாக கண்டன அறிக்கைகளுடன் வேடிக்கை பார்ப்பதைத் தவிர வேறு வழி கிடைக்கவில்லை.

ஆனால், தமிழினத்தை அழிப்பதில் வேறுபாடுகளின்றி ஒன்றுபட்டு செயற்பட்டவர்கள், இப்போது இரண்டுபட்டுப் போயிருப்பது தமிழ் மக்களைப் பொறுத்தவரை மட்டற்ற மகிழ்ச்சியைக் கொடுத்திருக்கின்றது. வலிகளைச் சுமந்த தமிழ் மக்கள், எதனை விரும்பினார்களோ இன்று அதனை சிங்கள தேசமே செய்வதில் தமிழ் மக்களைப் பொறுத்தவரை மட்டற்ற மகிழ்ச்சியடைபவர்களாக இருக்கின்றார்கள் என்பதை பலரது வாயில் இருந்து வரும் கருத்துக்களும் உறுதிப்படுத்துகின்றன.

வினை விதைத்தவர்கள் இப்போது அதனை அறுவடை செய்யத் தொடங்கியிருக்கின்றார்கள். நாம் என்ன செய்ய முடியும், வேடிக்கை பார்ப்பதைத்தவிர என்பதுதான் தமிழ் மக்களின் நிலை.

# 11 ஆயிரம் போராளிகளை சந்திக்கவிடாமல் தடுக்கும் மகிந்த அரசு

## விடுவிப்பதாகக் கூறப்படுபவர்கள் வேறு முகாம்களில் தடுத்து வைப்பு

விடுதலைப் புலிகளுடன் தொடர்புடையவர்கள் என்ற சந்தேகத்தின் பேரில் தடுத்து வைக்கப்பட்டுள்ள சுமார் 11,000 பேரை தாம் சந்திக்க முடியாத நிலை காணப்படுவதாக மனிதாபிமான அமைப்புகள் தெரிவித்துள்ளன.

விடுதலைப் புலிகளுடன் தொடர்புடையவர்கள் எனச் சந்தேகிக்கப்படும் நபர்கள் தடுத்து வைக்கப்பட்டிருக்கும் முகாம்களுக்கு 2009 யூலை மாதத்திற்குப் பின்னர் தாங்கள் செல்லவில்லை எனத் தெரிவித்துள்ள செஞ்சிலுவைச் சர்வதேசக் குழு, அதற்கு அனுமதி வழங்கப்படவில்லை எனக் குறிப்பிட்டுள்ளது.

முகாமில் உள்ளவர்களின் பெயர் விவரங்களை அவ்வேளையில் பதிவு செய்தோம். அதற்குப் பின்னர் எமக்கு அனுமதி வழங்கப்படவில்லை எனச் செஞ்சிலுவைச் சர்வதேசக் குழுவின் இலங்கைக்கான பேச்சாளர் சரசி விஜயரட்ண சர்வதேச செய்திச் சேவை ஒன்றுக்கு வழங்கிய நேர்காணலில் தெரிவித்துள்ளார்.

இதேவேளை, தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் நாடாளுமன்ற உறுப்பினர் சுரேஷ் பிரேமச்சந்திரனும் இதே கருத்தை வெளியிட்டுள்ளார். இந்த முகாம்களில் யார், யார் உள்ளனர் என்பது தெரியாது. கடந்த தடவை ஜனாதிபதியை நாம் சந்தித்தவேளை அவர், சம்பந்தப்பட்டோரின் பெயர் விவரங்களை வெளியிடுவார் எனத் தெரிவித்திருந்தார். எனினும், இதுவரை எதுவும் இடம் பெறவில்லை என சுரேஷ் பிரேமச்சந்திரன் குறிப்பிட்டுள்ளார். அரசு தேர்தலுக்காகவே ஒரு சிலரை விடுவித்தது எனவும் அவர் தெரிவித்துள்ளார்.

இதேவேளை, உள்ளூர் மனிதாபிமான அமைப்பொன்று காலியில் உள்ள அரச தடுப்பு முகாமொன்றில் விடுதலை செய்யப்பட்டவர்களில் 200 பேர் மீண்டும் தடுத்து வைக்கப்பட்டுள்ளனர் எனக் கிடைத்துள்ள தகவல்கள் குறித்துத் தாங்கள் ஆராய்ந்து வருகின்றனர் என்றும் அந்த அமைப்பின் பிரதிநிதி தெரிவித்துள்ளார்.

ஜனவரி 9ம் திகதி விடுதலை செய்யப்பட்டவர்கள் காலியில் உள்ள தடுப்பு முகாமிற்கு கொண்டு செல்லப்பட்டனர் என சம்பவத்தை நேரில் பார்த்த 60 வயது நபர் ஒருவர் தெரிவித்தார் எனவும் அந்த அமைப்பு குறிப்பிட்டுள்ளது.

# வன்னி மக்களின் எதிர்காலத்தை அச்சுறுத்துகிறது போர்ப் பேரழிவு

யாழ்.ஆயர்

வன்னிப் பிரதேசத்தில் ஏற்பட்டுள்ள போர்ப் பேரழிவுகள் அங்கு வாழ்ந்த மக்களின் எதிர்காலத்தை அச்சுறுத்துகின்றன. வன்னிப் பகுதியின் எந்தத் திசையை நோக்கினாலும், மனதால் நினைத்தும் பார்க்க முடியாத அளவுக்கு அது நாசமடைந்திருப்பதையே காணமுடிகிறது. போரினால் உண்டாகியுள்ள அதீத அழிவுகளைப் புனரமைப்பதும், புனர்வாழ்வு பெறுவதும் அந்த மக்களுக்குத் தாங்க முடியாத பளுவைச் சுமத்தியுள்ளது. இவ்வாறு கவலை தெரிவித்திருக்கிறார் ஜனவரி மாத இறுதியில் வன்னிப் பகுதிக்கு விஜயம் செய்திருந்த யாழ்.ஆயர் அதிவண. தோமஸ் சௌந்தரநாயகம்.

கடந்த மாதம் 29ம் திகதி படையினரின் அனுமதியுடன் வன்னி சென்றிருந்தார். கிளிநொச்சி, மாங்குளம், ஒட்டிசுட்டான், புதுக்குடியிருப்பு, புதுமாத்தளன் ஆகிய பகுதிகளுக்குச் சென்றிருந்த அவர் அங்கு மீளக்குடியமர்ந்த மக்களின் நிலைமைகளைக் கேட்டறிந்தார். தாம் சென்ற பகுதிகளில், மிகக் குறிப்பாக மாத்தளன் பகுதியில் ஏற்பட்டுள்ள அழிவுகள், கொடுரங்கள், காணப்படும் எச்சங்கள் தமது மனதை உலுக்கியதாக அவர் பெரும் கவலையுடன் தெரிவித்தார்.

எங்கும் பேரழிவு. அவற்றைக் கண்டு மனம் திணுக்குற்றது. புனர்வாழ்வும், புனர்நிர்மாணமும் மிகப் பாரிய அளவில் தேவைப்படும். மக்கள் தமது ஆயுள்கால சேமிப்புக்களை இழந்துவிட்டார்கள். அவர்கள் தமது வாழ்க்கையை மீள அமைப்பது பெரும் சுமையாக இருக்கப்போகிறது. கிராமங்கள் புதர் மண்டிக்காணப்படுகின்றன. வயல்கள் வனங்களாக மாறி விட்டன. தேவாலயங்கள் அழிந்துவிட்டன. கடவுளர் திருவுருவங்கள் சேதமாகிக்காணப்படுகின்றன. நெல்வயல்களில் முள் பற்றைகள் மேலோங்கி வளர்ந்துள்ளன.

கால்நடைகளை காண்பது அரிதாக உள்ளது. வீடுகள் சின்னாபின்னமாகி விட்டன. எரிந்துள்ள பஸ்கள்,



வான்கள், கார்கள், மோட்டார் சைக்கிள்கள் வீதிகளை மூடிக் குவிந்துள்ளன. இந்தப் பிரதேசங்களில் மீள் வாழ்வை தொடங்குவது சாத்தியமாகுமா என்று மனம் பேதலித்தது என்று விவரித்தார் யாழ். ஆயர்.

# சர்வதேசச் சட்டத்தின் பார்வைக்கு

அப்பாவித் தமிழ் மக்களுக்கு எதிராக, முக்கியமாக 2009ல் முதல் 5 மாதங்களில் வட மாகாணத்தில், சிறீலங்கா அரசு புரிந்த பரவலான ஒருங்கமைக் கப்பட்ட குற்றங்கள், சர்வதேச மனித உரிமைச் சட்ட மீறலுக் குள் அமைகின்றன எனச் சட்ட நிபுணர்கள் கூறுகின்றனர். இந்தக் காலவரையறையில், ஐ.நா உட்பட சர்வதேசச் சமூகத் தினால் காட்டப்பட்ட அலட்சியப் போக்கினால், 30,000 க்கும் மேற்பட்ட தமிழ் மக்கள் உயிரிழக்க நேரிட்டது.

தற்போதைய நிலையில்,

*(அ) சிறீலங்கா அரசு, நடைபெற்ற பேரழிவுகளைச் சரித் திரப் பதிவுகளிலிருந்து அழித்தலைத் தடுத்தல்*

*(ஆ) சர்வதேசம் தமிழ் மக்களை, நடைபெற்ற குற்றங் களுக்குப் பதில் சொல்லுவதைத் தவிர்த்தும் நீதியைக் கோராது சமாதானமாகப் போகவேண்டும் எனவும் பரிந்துரை செய்யும் முயற்சிகளை எதிர்த்தல்.*

*(இ) சிறீலங்கா அரசு புரிந்த தமிழர்களுக்கு எதிரான போர்க் குற்றங்களையும், இனஅழிப்பு நடவடிக்கைகளையும், உலக நீதி மன்னறங்களில் கொண்டு செல்வதன் மூலம், பல்லாயிரக் கணக்கான பாதிக்கப்பட்ட தமிழ் மக்களுக்கு நீதி கோருதல்*

ஆகியவற்றை மேற்கொள்ளும் பொறுப்பு புலம் பெயர்ந்த தமிழ் மக்களின் தோள்களில் தங்கியுள்ளது.

சிறீலங்கா அரசு, இனச்சுத்திகரிப்பு, மனித இனத்திற்கெதி ரான குற்றங்கள், போர்க் குற்றங்கள், இனஅழிப்பு

நடவடிக்கைகள் ஆகியவற்றை மேற்கொண்டதாகச் செய் யப்பட்ட பிரச்சாரத்தை, அலட்சியம் செய்து திசை திருப்பி விட்டு, பயங்கரவாதத்திற்கெதிரான போர் என சர்வதேசம், இலங்கையில் 'ஜனநாயக' (சமாதானப்பேச்சு) முயற்சிகளிலும், விடுதலைப் புலிகளை ஒடுக்கும் முயற்சிகளிலும் இறங்கியது.

தமிழ் மக்கள் பெருந்தொகையாகக் கொல்லப்பட்டதைத் தடுக்கவும், பேரழிவின் பின் மெனிக் பண்ணையில் அடைக் கப்பட்டதையும், தடுக்கும் பொறுப்பிலிருந்து சர்வதேசச் சமூகம் தவறியதால், தமிழரின் நீதியை நிலைநாட்ட முன் வரும் எல்லோரும் புதிய, தேசிய சர்வதேச வழக்காடும் தந்திரங்களை ஆராய்ந்து, ஆயிரக்கணக்கில் பாதிக்கப்பட்ட தமிழ் மக்களுக்குப் பரிகாரம் தேட வேண்டும்.

சிறீலங்கா அரசும், ஐக்கிய நாடுகளைப் போன்ற சர்வதேச மனித உரிமை அமைப்புகளும் இணைந்து தமது செயல் களால் வன்னியில் நடத்திய பேரழிவையும், அதன்பின் மக் கள் முட்கம்பி வேலிக்குள் அடைபட்டதை நியாயப்படுத்தி யதையும், சிறீலங்கா அரசு நடத்திய பேரழிவை, சர்வதேசச் சரித்திரத்தில் இருந்து சிறிது சிறிதாக அழிப்பதையும் எதிர்த் துப் பூகோள ரீதியில் புலம்பெயர்ந்த தமிழ் மக்கள் ஒரு முக் கிய பங்கு எடுக்க வேண்டும்.

விடுதலைப் போரின் இறுதிக் கட்டத்தில் நடைபெற்ற சிறீலங்கா அரசின் சர்வதேச மனிதாபிமான சட்டங்களினை அத்துமீறியமை குறித்து, நடுநிலைமையான விசாரணைகளை மேற்கொள்வதற்குச் சர்வதேச நாடக மேடையில், நின்று ஆடும் வலுவுள்ள அரசியல் நடிகர்களின் உறுதியின்மையை உலகம் முழுவதும் கண்டுள்ளது. இவ்விடயத்தில், சிறீலங்கா அரசின் சுயகுணத்தை வெளிக்கொணரும் போர்க் குற்றத் திற்கான சட்ட நடவடிக்கைகளைத் தொடங்குவதை ஊக்குவிக் கும் திறமை தனியே புலம்பெயர் வாழ் மக்களிலேயே உள்ளது.

1958, 1977, 1983 கறுப்பு யூலையில் நடைபெற்ற தமிழின எதிர்ப்பு இனக்கலவர நாட்களைப் போலல்லாது, தற்போது ஈழத் தமிழர்கள், உலகம் பூராவும் பரந்து பலமான நிலையில் உள்ளதோடு, அவர்களையோ, அவர்களின் குடும்பத்தின ரையோ மிரட்ட முயலும் சில நாடுகளின் யுக்திகளுக்கு அப் பாற்பட்டு உள்ளனர்.

மேற்குலக நாடுகளில் ஏறத்தாழ எல்லாமே சர்வதேச மனித உரிமை சாசனங்களில் கையொப்பம் இட்டமையால், சிறீலங்கா அரசின் பரப்புரையாலோ அல்லது தமது சொந் தங்களின் மரணம், படுகாயம் ஆகிய நிகழ்வுகளாலோ பாதிக் கப்பட்டிருக்கும் தமிழ் மக்கள் (தம்முடைய தாய்நாட்டிற்கு ஆற்ற வேண்டிய கடமையின் அடிப்படையில்) அடிப்படை உரிமைகளுக்கும் சுதந்திரத்திற்கும் உரிமை உள்ளவர்க ளாகின்றனர்.

சரித்திர ரீதியாக, சிங்களப் பௌத்த மேலாண்மையில் ஊறிய சிறீலங்கா அரசின் நிறைவேற்று அதிகாரத் தலையீட்டால், இலங்கையில் உள்ள நீதிபரிபாலன அமைப்புகள் தமிழரின் நீதி விடயத்தில் பாரதூரமாகப் பாதிக்கப்பட்டுள்ளன. எனவே, தமிழ் மக்களுக்கு ஏற்பட்ட அநீதியை எடுத்துரைத்து தீர்வு காண்பதற்குப் புலம்பெயர்ந்த தமிழர் இலங்கைக்குள் செய்

## சட்ட மையம்

### மேற்கண்ட அட்டவணைக் கட்டங்களின் உள்ளே உள்ள எண்களின் விளக்கம் (சட்ட நடவடிக்கை மேற்கொள்வதற்கான வழிமுறை விளக்கம்)




01. சட்ட மையம் (சிறீலங்கா அதிகாரிகளின் மேல் வழக்குப் பதிவுக்கு) போர்க்குற்றம் புரிந்தமை, மனித உரிமை மீறல் குற்றங்கள், இனஅழிப்பு உட்பட வேறு குற்றங்கள்
02. சர்வதேசப் பிராந்தியச் சட்டப் பதிவுகள்
03. சட்ட ஆலோசகர்கள்: Prof. Boyle, Prof. Fein, Prof. Feterstein, Prof. Sornaraja
04. சர்வதேசப் பிராந்தியச் சட்ட வேலைகளுக்கு அமர்த்தப் பட்ட ஒன்று சேர்ந்த சட்ட அமைப்புகள்.
05. சர்வதேசச் சட்டமுறைகளைப் பற்றிய ஆராய்ச்சி.
06. சர்வதேசக் குற்ற நீதி மன்றம்
07. சர்வதேச வழக்கறிஞர் நீதி மன்றம்
08. அமெரிக்காவின் மனித உரிமை நீதி மன்றம்.
09. விசாரணைக் குழுக்கள்
10. சட்டவகைத் தீர்மானம் எடுப்பதற்கான வழிவகைகளை நிலைநாட்டுதல்.
11. ஐ.நா. பாதுகாப்புச் சபை முன்னெடுக்கும் வழக்குகள், அங்கத்துவ நாடுகள் கொண்டு வரும் வழக்குகள், ஐ.நா. வின் வழக்கறிஞர்கள் பதினாறாம் சரத்துப்படி தொடங்கும் வழக்குகள்.
12. இலங்கைக்கு எதிராகக் குற்றச்சாட்டுகளைக் கொண்டு வர ஒத்துழைக்கும் நாடுகளை இனம் காணல்.
13. ஐரோப்பிய மனித உரிமை நீதி மன்றத்தில் குற்றவியல், குடியியல் வழக்குத் தாக்கல்: ஐரோப்பாவில் இருக்கும் மக்களைப் பாதிக்கக்கூடிய இலங்கையில் நடத்தப்பட்ட போர்க் குற்றங்களைவ வழக்காகக் கொணரல் அல்லது வட அமெரிக்கத் தமிழர்கள் உள்நாட்டு அமெரிக்க மனித உரிமை நீதி மன்றத்தில் போர்க்குற்ற வழக்கு கொணரலாம்.
14. மலேசிய விசாரணைக் குழுக்கள் அல்லது ஆப்பிரிக் காவில் உள்ள மனித உரிமை நீதி மன்றங்களும் இலங் கைக்கு எதிரான குற்றங்களை விசாரிக்க ஒத்துழைக்கலாம்.
15. தேசிய சட்டமன்றத்தில் சட்டப் பதிவுகள்.
16. தேவைக்கேற்றப்படி சட்ட உதவி அல்லது தனிப்பட்ட முறையில் உதவி.
17. நாடு–1–ன் குழு – உள்நாட்டுச் சட்ட ஆராய்ச்சியின் மூலம் சாட்சிகளைச் சேகரித்தல்.
18. நாடு –2–ன் குழு.
19. நாடு –N-ன் குழு.
20. குற்றம் பற்றிய முறைப்பாடு.
21. குடியியல் முறைப்பாடு.
22. சாட்சியம் சேகரித்தல்.
23. ஒன்றோடொன்று இணையும் மூலப்பொருள்களையும் சூழ்நிலையிலிருந்து அனுமானிக்கக்கூடிய சாட்சியங் களையும் தயாரித்தல்.
24. சாட்சி சொல்பவர்களை இனங்காணல்.
25. முதல்முறை விஜயம் / அடிப்படைத் தரவுகளின் அடித் தளத்தை உண்டாக்கல்.
26. தரவுகளின் அடித்தளத்தைத் தயாரித்தல் (பெயர்களைப் பாதுகாத்து தனிமைப்படுத்தல்), பூகோளப்பரப்பு, குற்றங் களைப் பிரித்து சாட்சியம் அளித்தல், நேர அட்டவணை களை ஒருங்கிணைத்தல், மக்கள் முன்னிலைக்கு வரச் சம்மதித்தல் ஆகியன.
27. /
28. சத்தியப்பிரமாணத்துடன் அல்லது சாட்சியத்துடன் முறைப்பாடுகளைப் பதிவு செய்தல்.
29. நடுநிலைமை பகிர்வதற்கு அத்திவாரம் இடுதல்.
30. ஒலி, ஒளிப்பதிவுகளுக்குக் கேள்வி அமைத்தல்.
31. நாட்டில் வாழும் மக்களின் சத்தியப்பிரமாணத்தையும், செய்மதியின் மூலமாகவும் வேறு வகைகளாலும் ஏற்கக் கூடிய சாட்சிகளை வைத்து குடியியல் வழக்கைப் பதிவுச் செய்தல்.
32. உதாரணப்படுத்தும் குற்றச்சாட்டின் அமைப்பை அமைத் தல் (தனியே ஒரு நாடு வழக்கை நடத்துவதானால்) அல்லது குற்றயியல் முறைப்பாட்டைப் பதிவு செய்தல் (விசாரணை செய்யும் அமைப்பில்) அதற்கேற்ற சத்தியப் பிரமாணங்கள், செய்மதி ஆராய்ச்சிகள், வேறு ஒத்துப் போகும் சாட்சிகள் (சாட்சி சேகரிக்கும் குழுவினால் பதியப்பட்ட முறைப்பாடுகளுக்கு அனுசரணை வழங்கும்).
33. சட்ட அதிகாரிகளின் முன் சத்தியப்பிரமாணம்.
34. சட்ட அதிகாரிகளின் முன் சத்தியப்பிரமாணம், ஒலி, ஒளிப்பதிவான சாட்சிகளை 2–N நாட்டிலிருந்து பெறுதல்.
35. எல்லா நாடுகளிலிருந்தும் சட்ட நடவடிக்கைகளை ஒருங்கிணைத்தல்.
36. சட்ட நடவடிக்கையை முன்னெடுக்கும் அத்திவாரம்.

உண்மையின் முன்னால் நடுநிலைமை என்பது இல்லை

# அகப்பட்டிருக்கும் சிறீலங்கா அரசு

யப்பட்ட குற்றங்களுக்கு, இலங்கைக்கு வெளியில் சட்ட நடவடிக்கைகளைத் தொடரமுடியும்.

இலங்கைக்கு வெளியில் உள்ள நாடுகளை உள்வாங்கிப் புலம்பெயர் தமிழர்கள் பலவழிகளில் சட்ட நடவடிக்கைகளை முன்னெடுக்க வேண்டும். இம்முயற்சிகளை அவர்கள் இலங்கைக்கு வெளியில் அமுலாக்கப்படும் சர்வதேசச் சட்டங்களின் உதவியுடன் நிறைவேற்ற முடியும். இதன் மூலம் எதிர்வரும் நாட்களில் சர்வதேசச் சமூகம் எடுக்கும் ஆதரவான முயற்சிகளை ஊக்கப்படுத்தியும், அதற்கு மாறாக ராஜபக்சேவின் அதிகாரத்திற்கு மன்னிப்பு வழங்க முயற்சிக்குமிடத்து அதற்கு எதிராகவும் தேசிய, சர்வதேச மட்டங்களில் சட்டநடவடிக்கைகள் மேற்கொண்டு பணியாற்றலாம்.

(x) புலம் பெயர் தமிழ் மக்கள் சட்ட நடவடிக்கைகளை மூன்று வழிகளில், அதாவது சர்வதேச, பிராந்திய அல்லது தேசிய *லாத இடத்து, மற்றவைகளில் அவற்றின் அடிப்படையில் அங்குள்ள சட்ட அமைப்புகளில் சேர்த்தபின், தமிழ் மக்கள் அங்கிருக்கும் அரசுகள் ஊடாக குற்றவியல் நடவடிக்கைகளைத் தொடர அழுத்தம் கொடுக்க வேண்டும். இவற்றைச் சர்வதேச வழிமுறைகளிலும், பிரதேச வழிமுறைகளிலும் கொண்டு வரவும் முடியும்.*

பூகோள ரீதியில், தமிழ் மக்கள் பரவியிருப்பதால், இந்நடவடிக்கைகளை ஒரே நேரத்தில் சமாந்திரமாகப் பல நாடுகளில் நடத்துவதன் மூலம், பல இடங்களில் சட்ட நடவடிக்கைகளை எடுப்பதால், சிறீலங்கா அரசாங்கம் பதில் சொல்ல வேண்டிய நிர்பந்தத்திற்கு உள்ளாக்கலாம். அதே நேரம் வன்னியில் நடைபெற்ற இனஅழிப்பை மறைமுகமாக சிறீலங்கா அரசு மூடிமறைக்காத முறையில், சர்வதேசத்திற்கு வெளிக்கொணரவும் இம்முயற்சி உதவும்.

**சிறீலங்கா அரசும், ஐக்கிய நாடுகளைப் போன்ற சர்வதேச மனித உரிமை அமைப்புகளும் இணைந்து தமது செயல்களால் வன்னியில் நடத்திய பேரழிவையும், அதன்பின் மக்கள் முட்கம்பி வேலிக்குள் அடைபட்டதை நியாயப்படுத்தியதையும், சிறீலங்கா அரசு நடத்திய பேரழிவை, சர்வதேசச் சரித்திரத்தில் இருந்து சிறிது சிறிதாக அழிப்பதையும் எதிர்த்துப் பூகோள ரீதியில் புலம்பெயர்ந்த தமிழ் மக்கள் ஒரு முக்கிய பங்கு எடுக்க வேண்டும்.**

நீதி அமைப்புகள் ஊடாக நடத்தலாம்.

அரசுக்கு எதிராக நடவடிக்கை எடுப்பதற்கு ஏற்ற முக்கியமான இடம் சர்வதேச நீதிமன்றம் ஆகும். அங்கே, ஒரு அங்கத்தினராக இருக்கும் நாடு இன்னொரு அங்கத்துவம் பெற்ற நாட்டுக்கெதிராக வழக்குத் தொடர முடியும். இதன் பொருட்டு புலம்பெயர் தமிழர்கள் இதற்கு இணக்கப்பாடு தெரிவிக்கும் ஒரு நாட்டை அணுகி சிறீலங்காவிற்கு எதிராக நடவடிக்கை எடுக்க வேண்டும்.

புலம்பெயர்ந்து தமிழர் வாழும் நாடுகளில் உள்ள தேசிய நீதிமன்றங்கள், வெளிநாட்டு விடயங்களைத் தீர்ப்பதற்கு ஆதரவு கொடுப்பதாகவும், தங்கள் உள்நாட்டுச் சட்டங்கள் மற்றும் தேசத்தின் பாதுகாப்பு பாதிக்கப்படாத இடத்து, அவர்கள் போர்க்குற்ற நடவடிக்கை மேற்கொள்ள உரிய இடங்களாகலாம். இதற்கு, நோர்வே, ஸ்பெயின் போன்ற நாடுகள் முதலிடம் பெறலாம். தனிப்பட்ட ஒருவருக்கெதிராகவோ, ஒரு குழுவினருக்கு எதிராகவோ குற்றவியல் அடிப்படையில் ராஜபக்சே நிர்வாகத்தில் உள்ளவர்களுக்கு எதிராகத் தாக்கல் செய்வதானால் புலம்பெயர் மக்களுக்குப் பல இடங்கள் உண்டு.

சர்வதேசக் குற்றவியல் நீதிமன்றம், ரோமாபுரி ஒப்பந்தத்தில் கையொப்பமிட்ட நாடுகளை விசாரிக்க உரிமையுண்டு. சிறீலங்கா, அப்படிக் கையொப்பமிடாத நாடாகியதால், அதற்குச் சில வழிகளில் பாதுகாப்பு இருக்கலாம். எனினும், ஐ.நா பாதுகாப்புச் சபை இதைப் பற்றி ஆராய வேண்டும்.

சட்டம் சம்பந்தமான குழுக்களை இனம் கண்டு ஒரு முயற்சி எடுக்கும் புலம்பெயர் மக்களின் கட்டுமானம், சட்ட முறைகளை அமுல்படுத்த நிறுவப்பட்டபின், வெவ்வேறு நாடுகளில் நடவடிக்கை எடுப்பதற்குத் தேவையான நடைமுறை விடயங்களை ஆராய்ந்து, துரிதமான செயல் நடவடிக்கைகளில் இறங்க வேண்டும்.

*1. சட்ட நடவடிக்கையில் சாட்சிகளைச் சேர்க்கும் இயந்திரமும், அவற்றுள் சிறீலங்கா அரசுக்கு எதிரானவற்றை ஒன்று சேர்த்து, பலதரப்பட்ட தலைப்புகளில் - போர்க்குற்றங்கள், மனித சமூக மீறல்கள், சித்திரவதை மற்றும் இனஅழிப்பு என வரையறுக்கப்பட வேண்டும்.*

*2. மேற்படி கிடைக்கப்பட்ட சாட்சியங்களை, சிறீலங்கா அல்லாத மற்றைய நாடுகளில் (உதாரணமாக நோர்வே, பிரான்ஸ், கனடா, பிரித்தானியா) இருக்கும் தேசிய சட்டங்களின் அடிப்படையில் சட்ட நடவடிக்கைகள் எடுப்பதற்கு ஏற்ற வகையில் ஒழுங்குபடுத்த வேண்டும்.*

*3. மேற்கூறியபடி ஒழுங்குபடுத்தப்பட்டபின், அவற்றைக் குற்றவியல் அல்லது குடியியல் முறைப்பாடுகளாக மாற்றி, சில தேசியச் சட்ட நிர்வாகங்களில் பதிவு செய்து, அப்படி இய*

தமிழ் மக்கள் நீதி கோருவதற்குப் பல பாதைகள் இருக்கின்ற போதும், அதே நேரத்தில் புலம்பெயர் தமிழ் மக்களை எதிர்நோக்கிப் பல சவால்களும் காத்திருக்கத்தான் செய்யும். இந்நடவடிக்கையால் வெற்றி பெறும் சட்டமுடிவுகளை அடைவதற்கு ஒரு தெளிவான விளக்கத்துடன் கீழ்த்தரப்பட்ட விடயங்களை நோக்க வேண்டும்.

*1. போர்க்குற்ற சட்ட நடவடிக்கைகள் எடுக்க நீண்ட அல்லது, பல வருடங்களுக்குத் தொடர்ந்தும் செல்ல வாய்ப்பிருப்பதால், ஒரு நாளில் அவை முடிவு பெறமாட்டா.*

*2. சில குற்றங்களைச் சில நாடுகளின் தேசிய நீதிமன்றங்களில் அல்லது வெளிநாட்டுச் சர்வதேச நீதி மன்றங்களில் விசாரிக்க முற்படும்போது, சட்டச் சிக்கல்கள் ஏற்படலாம்.*

*3. இப்படிப்பட்ட தடைகளை மீறினபோதும் 'ஏன் இலங்கையில் உள்நாட்டு விசாரணைகள் மேற்கொள்ளப்படவில்லை?' போன்ற பிரதிவாதம் எழுப்பப்படலாம். இதற்கேற்ப, நீதிமன்றத்தை எமது பக்கம் ஈர்ப்பதற்குரிய வாதத்தை உறுதி செய்து, வழக்குகளை மேலெடுக்க வேண்டும்.*

*4. வன்னிப் பேரழிவைக் கொண்டுவரும் போது நாட்டின் இறையாண்மை பாதுகாப்பு போன்ற வாதங்கள், தனிப்பட்ட இராணுவ அதிகாரிகளின் பொறுப்பு இருக்கும்போது கொண்டு வரப்படலாம். ஆனால் சரத் பொன்சேகா போன்று அவர்கள் பதவி விலகிய பின் இந்த வாதத்தைப் பாவிக்க முடியாது. மகிந்த ராஜபக்சே, கோத்தபாயா ராஜபக்சே போன்ற மற்றவர்க்கும் வழமையான சர்வதேசச் சட்டங்களின்கீழ் வரும் இறையாண்மை சம்பந்தப்பட்ட பாதுகாப்பு நிச்சயமாக கிடைக்குமெனக் கூற முடியாது. வன்னியில் ஜனவரி - மே, 2009ல் நடத்தப்பட்ட நிகழ்வுகளுக்கு மகிந்த ராஜபக்சே மீது வழக்குத் தாக்கல் செய்வதற்கு உள்ள சட்ட வலு, முன்கூட்டியே அரசுத் தலைவர்களுக்கு எதிராகத் தீர்க்கப்பட்ட வழக்குகளின் முடிவுகளை ஒட்டியும், அவற்றோடு இணைந்த அமெரிக்க ஐரோப்பிய குற்றவியல் குடியியல் வழக்குகளில் சிலி நாட்டின் முன்னாள் அதிபர் பினோச்சே, சேர்பியா நாட்டின் முன்னாள் அதிபர் மிலோசோவிச், லைபீரியா நாட்டின் சார்ல்ஸ் டைலர் ஆகியோருக்கு எதிரான தீர்ப்புகளும் பின்பற்றப்படலாம்.*

*5. சர்வதேசச் சமூகத்தின் பலவீனமானப் போக்கினால், சிறீலங்கா அரசாங்கம் அதைப் பாவித்து தனது பாரிய கொலைகளை வெளிக்கொணரும் சாட்சிகளை அழித்தொழித்துள்ளது. இவ்விடயம்பற்றி நீதிமன்றங்கள் அனுதாபத்துடன் நோக்கினாலும், சாட்சிகளைப் புதிய வழிகளில் பிரித்தானியா சனல்-4 போன்ற செய்மதிக் கோள்களின் பதிவுகளைப் பாவித்துப் பெற வேண்டும்.*

சட்ட நடவடிக்கைகள் கடினமானவையாகவும் சிக்கலானதாகவும் இருக்கலாம். ஆனால் இத்தகைய சிக்கல்கள் தாண்



டப்பட முடியாதவை அல்ல. புலம்பெயர் வாழ் தமிழர்கள் சிறீலங்காவை இந்தச் சட்ட வலைக்குள் மாட்டுவதற்குத் தேவையான அறிவைப் பெற்றிருக்கிறார்கள் என்பதில் ஐயமில்லை.

(x) **சட்டநடவடிக்கைக்கு ஏற்ற இடங்களின் ஒழுங்கமைப்பு**

**1).சர்வதேசம்**

அ). சர்வதேசக் குற்றவியல் நீதி மன்றம்.
தனிமனிதரின் குற்றப் பொறுப்பு

ஆ). சர்வதேசச் சட்ட வல்லுனர் நீதி மன்றம்.
அரசாங்கக் குற்றப் பொறுப்பு

**2). பிரதேசம்**

அ) (1) ஐரோப்பிய மனித உரிமை நீதி மன்றம்
உள் அமெரிக்க மனித உரிமை நீதி மன்றம்.
(2) பிரதேச வாரியாகத் தெரிவு செய்யப்பட்ட அரசியல் அமைப்புகளின் சட்ட வலு

ஆ). (1) மலேசியப் போர்க்குற்ற நீதி மன்றம் மற்றும் வட அயர்லாந்து டப்ளினில் நடந்த மக்கள் நிரந்தர நீதிமன்றத்தின் இலங்கைப் போர்க்குற்ற விசாரணைக்குழு
(2) சர்வதேச அளவில் சட்ட முறையில் நடைமுறைப் படுத்தப்படாத தார்மீகத் தீர்வு

**3). தேசியம்**

இலங்கையின் ஊழியர்களைப் போர்க்குற்றத்திற்கு விசாரிக்கக் கூடிய நாடுகள்: நோர்வே, பிரான்ஸ், சுவிஸ், ஐக்கிய இராச்சியம், அமெரிக்கா, ஸ்பெயின், நெதர்லாந்து, லக்ஸ்ம்போர்க், சுவீடன், டென்மார்க் ஆகியவை. மேற்கூறிய நாடுகள் வெவ்வேறு வடிவங்களில் உலகளாவிய நீதி கூறும் வலுவைத் தங்கள் நீதி மன்றங்களுக்கு அளிக்கும் சட்டங்களை வகுத்துள்ளன. (இவை குற்றஞ்சாட்டவும், விசாரிக்கவும் தகுதி பெற்றவை)

(Tamilnet இணையதளத்தில் 07.02.2010 அன்று வெளியான "Sri Lanka, Acid Test for International Law" கட்டுரையின் தமிழாக்கம் )

உண்மையின் முன்னால் நடுநிலைமை என்பது இல்லை

# வீடு, வியாபாரம், காணி

## வாங்க விற்க அழையுங்கள்!




**NEED MORE HOMES FOR BUYERS....2.5% com**

East Scarborough — BRAND NEW HOME 3BM 3 WSRM

Detached home newer home, 9' ceiling 4 bm 3 wsrm

Ajax/tauntan — 264 000/- — 3 bm 23wsrm home

Markham — 3 years new luxary det home excellent community

Markham/denison — Business Opportunities — Commecial/retail sale or Lease

Warden /Stoufville — **25 Acre Lot**

Ajax/rosland — 389 900 — Detached home 4 bm/ 34wsrm 389 000/-

Ajax/ Church — 347 900 — Detached home 4 bm/4wsrm

Ajax/rossland — 339 000 — 3 bm 3wsrm Bsmnt apartment rent and live

140 000- — Keele/shepard 2 bm condo apt

Nielson/ mclevin — 2 BM /2wsrm CONDO APT FR SALE — $153 900 — 0% down pymnt 670/- mo pymnt mortgage call fr detail

Ellesmere/ scar — 3bm 4 wsrm Luxuary home finished bsmnt with kitchen

Markham Steeles — Newer Home 1950 sq ft hardwood,oak stares school shoping

# Mortgage 2.19% ..Refinance also.

EXPERIENCE!
COMMITMENT!
RESULTS!

**Business**
**Bar fr sale**



email: mushpakanthan@trebnet.com

## Pat Pushpakan-than

Real Estate BROKER
CENTURION AWARDS 6 yrs
Top producer 7 years
Masters Hall of Fame 07




Brokerage
AFFILIATE REALTY INC.
80 CORPORATE DR. TORONTO, ONT. M1H 3G5
416-290-1200

**416- 490-7653**
**416- 894-1187**

## Cafetaria

Location ! Location ! Open 7- 4:30 pm only
Rent is less ......high income
Located in High rise building

## Rent a room

With kitchen also 380/- Ladies only /Mother with kid/students warden/finch-house Close to mall, minutes to senaca

*condition applies ** not intended to solicit to the buyers under contract *Each office independently

** not intended to solicit property currently listed for sale *individual performance **Also available

---

"CHOICE IS YOURS, TRAINING IS OURS"



# "A" Level U Truck Driving School

## CLASS A, B, D & Z




STOP
OBSERVE
PROCEED
WITH "A" LEVEL

**AIR BRAKE CLASSES**

**AVAILABLE TRAINING 9, 13, 15 & 18 SPEED**

**License Guaranteed**
**Unlimited Lesson**
**Unlimited Road Test**
Including Air Break & Dock Backing
*Every Student trains individually*

Job Training Available with load

**Call: S. R. Thurai or Raja**
**416-428-5221 647-409-5221**
**1160 Birchmount Road, Unit 1B, Scarborough Ont. M1P 2B8**

---

# மூலிகை வைத்தியம்

# Herbal Treatment



கனடாவில் 14 வருடங்களுக்கு மேலாக மூலிகை வைத்தியம் செய்யும் ஒரேயொரு மூத்த வைத்திய நிபுணர்

தேங்காயில் நேரடியாக கொலஸ்ரோல் இல்லை என்று ஆய்வு செய்து கனடாவில் நிரூபித்த டாக்டர்

**நீண்டநாள் வியாதிகள், பிடிவாதமான நோய்கள், ஆய்வுகளில் புலப்படாத நோய்கள் இன்னதென்று கண்டு பிடிக்காமல் கைவிடப்பட்ட நோய்கள்.**

- ஆலோர்ஜிஸ்
- குழந்தைகளின் கிரந்தி
- தோல்வியாதிகள்
- ஆண்மைக்குறைபாடுகள்
- மாதவிடாய் கோளாறுகள்
- எந்தவிதமான தலையிடியாகிலும்
- கை, கால், கழுத்து நரம்பு வியாதிகள்
- இடுப்பில் இருந்து குதிக்கால்வரையும் பாயும் நரம்புவலிகள்
- முள்ளந்தண்டு 4ம் 5ம் விலகல்
- தலை மயிரில் புழு வெட்டுதல்

- Head aches + Migrain
- Allergies
- Skin Diseases
- Male Difficulties
- menses Problem
- Nervous Disorders
- Sciatica
- Carpal Syndrome (Wrist)
- Pinch Nerve
- Twisted Nerve in hand & Legs
- Prolapsed disc 4 & 5

தலைமயிரில் புளுவெட்டுதல், வட்டம் வட்டமாக தலையில், முகத்தில், தாடியில் முடி கொட்டுதல், அல்லது புளு அரித்தல் போன்றவற்றுக்கு உத்தரவாதத்துடன் குணமாக்க முடியும்.

Hair falling, like round and circular patches on head, face, and beard. (Tinen Alopecia, Tenea Capitis, Tenea Barbae)

Guranteed Treatment or Refundable.

முன்பதிவு மட்டும் **(By Appointment only)**
**Tel:416-286-1511**

கீதவாணி வானொலி, செந்தாமரை, உதயன், உலகத்தமிழ் பத்திரிகைகள் மற்றும் மருத்துவம் சஞ்சிகை புகழ்

**Dr.N.M. குமார் Phd, CNHP (Canada)**

**Health card not covered** மருத்துவ அட்டை செல்லுபடியாகாது

உண்மையின் முன்னால் நடுநிலைமை என்பது இல்லை

### மர்மப் பொருள் வெடித்து சிறுவன் காயம்

நிலத்தில் புதைந்திருந்த மர்மப் பொருளை எடுத்து உடைத்தபோது அது வெடித்ததில் சிறுவன் காயமடைந்த சம்பவம் கடந்த ஞாயிற்றுக் கிழமை (7) மிருசுவில் கெற்பேலியில் இடம்பெற்றது. இதே இடத்தைச் சேர்ந்த சபாபதி சாரங்கன் (வயது 12) என்பவர் கையில் காயமடைந்த நிலையில் யாழ். வைத்தியசாலையில் அனுமதிக்கப்பட்டுள்ளார்.

### 12,000 சிங்களவரை சிறைகளில் தடுத்து வைக்க திட்டம்

சிறீலங்கா அரசுக்கு எதிரானவர்கள் என சந்தேகிக்கப்படும் 12,000 பேரை தடுத்து வைப்பதற்கு தென்னிலங்கையில் தடுப்பு முகாம்களை தயார்படுத்தி வருவதாக ஜே.வி.பி தெரிவித்துள்ளது. இது தொடர்பில் ஜே.வி.பி தலைவர் சோமவன்ச அமரசிங்க மேலும் தெரிவித்துள்ள தாவது: அரசுக்கு எதிராக சதி செய்தவர்கள் என கூறி 12,000 சிங்கள மக்களை தடுத்து வைப்பதற்கு 8 தடுப்பு முகாம்களை அரசு தயார்படுத்தி உள்ளது. 8 புதிய தடுப்பு முகாம்களை நிறுவுவதற்கு காவல்துறை மா அதிபரினால் பெப்ரவரி 3ம் திகதி மற்றும் 8ம் திகதிகளில் மூன்று வர்த்தமானி அறிவித்தல்கள் வெளியிடப்பட்டுள்ளன. இந்த வர்த்தமானி அறிவித்தலின்படி புதிய தடுப்பு முகாம்கள் கொழும்பு இராணுவத் தலைமையகம், பனாகொட இராணுவ முகாம், இராணுவக் காவல்துறைப் படைப் பிரிவின் தலைமையகம், நெலுக்குளம் தொழில்நுட்பக் கல்லூரி முகாம், கடற்படைத் தலைமையகம், வெலிசர கடற்படை நூதனசாலை முகாம் மற்றும் திருகோணமலை கடற்படை முகாம் என்பவற்றில் நிறுவப்படவுள்ளதாக அறிவிக்கப்பட்டுள்ளது என்றார்.

### அவுஸ்திரேலிய அரசியல்வாதியின் கோரிக்கை சிறீலங்கா நிராகரிப்பு

போர்க் குற்றச் செயல்கள் தொடர்பில் அவுஸ்திரேலிய நாடாளுமன்ற உறுப்பினர் ஜோன் மெர்ஸி விடுத்த கோரிக்கையை சிறீலங்கா அரசாங்கம் நிராகரித்துள்ளது. ஐக்கிய நாடுகளின் வழிகாட்டுதலின் பேரில் போர்க் குற்றச் செயல்கள் தொடர்பில் விசாரணை நடத்தப்பட வேண்டுமென ஜோன் மெர்ஸி கோரிக்கை விடுத்திருந்தார். எனினும், இந்தக் கோரிக்கையை ஏற்றுக்கொள்ள முடியாது என சிறீலங்கா அரசாங்கம் அறிவித்துள்ளதாக திவயின பத்திரிகை செய்தி வெளியிட்டுள்ளது. சிறீலங்காவின் உள்விவகாரங்களில் தலையிட்டு செய்ய அவுஸ்திரேலிய நாடாளுமன்ற உறுப்பினருக்கு எவ்வித அருகதையும் கிடையாதென அரசாங்கம் சுட்டிக்காட்டியுள்ளது. ஐக்கிய நாடுகளோ அல்லது வேறும் அமைப்புக்களோ சிறீலங்கா விவகாரங்கள் தொடர்பில் விசாரணை நடத்த அனுமதி அளிக்கப்படமாட்டாது எனத் தெரிவிக்கப்பட்டுள்ளது.

### யாழ்ப்பாணத்தில் முதலாவது வெளிநாட்டு வங்கி திறப்பு

ஏச்.எஸ்.பி.சி. வங்கி யாழ்ப்பாணத்தில் தனது புதிய கிளையை காங்கேசன்துறை வீதியில் அமைந்துள்ள 145ம் இலக்கக் கட்டடத்தில் கடந்த வியாழக்கிழமை (11ம் திகதி) வைபவ ரீதியாகத் திறந்து வைத்துள்ளது. இந்த வங்கிக் கிளையை மத்திய வங்கியின் ஆளுநர் அஜித் நிவாட் கப்ரால் திறந்து வைத்தார். இதில் பிரித்தானிய தூதர் டொக்டர் பீற்றர் ஹெய்ஸ், இலங்கை மற்றும் மாலைதீவுக்கான வங்கியின் பிரதம நிறைவேற்று அதிகாரி நிக்.நிக் கலஸ் ஆகியோர் விசேட விருந்தினர்களாக கலந்துகொண்டனர். யாழ்ப்பாணத்தில் திறந்து வைக்கப்பட்டுள்ள முதலாவது வெளிநாட்டு வங்கி ஏச்.எஸ்.பி.சி என்பது குறிப்பிடத்தக்கது.

HSBC

### மகிந்தவின் நேரடிக்கட்டுப்பாட்டில் தகவல், ஊடகத்துறை!

தகவல் மற்றும் ஊடகத்துறை அமைச்சுப் பொறுப்பை ஜனாதிபதி மகிந்த ராஜபக்ச ஏற்றிருப்பதாக, ஊடகத்துறை அமைச்சர் அனுர பிரியதர்ஷன யாப்பா தெரிவித்தார். தனது வேண்டுகோளை அடுத்தே இந்த அமைச்சுப் பொறுப்பை ஜனாதிபதி பொறுப்பேற்றார் என்றும் அவர் தெரிவித்தார். அத்துடன் தகவல் மற்றும் ஊடகத்துறை அமைச்சுப் பதவியைவிட்டுத் தாம் விலகுவதாகவும் அவர் தெரிவித்தார். எனினும் முதலீட்டு ஊக்குவிப்பு அமைச்சுப் பொறுப்பை இவர் தொடர்ந்து வகிப்பார் என்றும் தெரிவிக்கப்படுகின்றது. மகிந்த ராஜபக்சவின் நேரடிப் பொறுப்பில் இது திட்டமிட்ட ரீதியில் கொண்டுவரப்பட்டதாக கொழும்புச் செய்திகள் தெரிவிக்கின்றன. இதனால் ஊடகவியலாளர்கள் மீதான கெடுபிடிகள் மிக மோசமாக அதிகரிக்கலாம் என்று எதிர்பார்க்கப்படுகின்றது.

### யோசித ராஜபக்சவும் பதவி விலக வலியுறுத்தல்

அரசியலில் ஈடுபட்ட 14 இராணுவ அதிகாரிகளுக்கு கட்டாய ஓய்வை அரசு வழங்குமானால் ஜனாதிபதியின் புதல்வர் யோசித ராஜபக்சவும் பதவி விலகவேண்டும் என ஐ.தே.க தெரிவித்துள்ளது. கொழும்பில் இடம்பெற்ற ஊடகவியலாளர் மாநாட்டில் ஐ.தே.கவின் நாடாளுமன்ற உறுப்பினர் தயாசிறி ஜயசேகர இதனைத் தெரிவித்தார். அவர் மேலும் தெரிவிக்கையில், ஜெனரல் சரத் பொன்சேகாவுக்கு ஆதரவான இராணுவ அதிகாரிகளை பொய்யான குற்றச்சாட்டுக்களைச் சுமத்தி கட்டாய விடுமுறையில் செல்லுமாறோ இடமாற்றம் செய்தோ அரசு தண்டனைக்குட்படுத்துகின்றது. அப்படியாயின் முதலில் தண்டனைக்குட்படுத்தப்பட வேண்டியவர் கடற்படையில் பணியாற்றும் ஜனாதிபதியின் புதல்வர் யோசித ராஜபக்ச ஆவார். கடந்த ஜனாதிபதி தேர்தலின் போது ஜனாதிபதிக்கு ஆதரவாக பிரசாரங்களில் இவர் ஈடுபட்டுள்ளார். எனத் தெரிவித்தார்.

## ஜி.எஸ்.பி. வரிச்சலுகையை சிறீலங்கா இழக்குமா..?
# எதிர்வரும் 16ம் திகதி தெரியும்

சிறீலங்காவிற்கு வழங்கப்பட்டு வரும் ஜி.எஸ்.பி. பிளஸ் தீர்வைச் சலுகையை நிறுத்துவதற்கு ஐரோப்பிய ஒன்றியம் தீர்மானித்துள்ளது. ஐ.நா.வின் மூன்று சாசனங்களை மீறியதன் காரணமாகவே சிறீலங்காவிற்கு எதிராக இத்தீர்மானம் எடுக்கப்பட்டுள்ளது. ஐரோப்பிய ஒன்றியம் நடத்திய விசாரணைகளிலிருந்து சிவில், அரசியல் உரிமைகள் தொடர்பான சர்வதேச சாசனம், சித்திரவதைக்கு எதிரான சாசனம், சிறுவர் உரிமைகள் சாசனம் ஆகிய ஐக்கிய நாடுகள் சாசனங்கள் மூன்றினை சிறீலங்கா அரசாங்கம் மீறியுள்ளதாக தெரியவந்துள்ளது.

எனினும், இது தொடர்பான சம்பிரதாயபூர்வமான நடவடிக்கைகளை இம்மாத இறுதியில் மேற்கொள்வதற்கு ஐரோப்பிய ஒன்றிய நாடுகள் இணக்கம் கண்டுள்ள போதிலும், மேற்படி தீர்மானத்தை நடைமுறைப்படுத்துவதற்கு இன்னும் 6 மாத காலம் எடுக்கும் என்று ஒன்றியத்தின் அதிகாரிகள் தெரிவித்துள்ளனர்.

ஜி.எஸ்.பி சலுகையை தக்க வைத்துக் கொள்வதற்கு அல்லது அதனை மீளப் பெறுவதற்கு ஏதுவான நடவடிக்கைகளை சிறீலங்கா மேற்கொள்ளவில்லை என்று ஐரோப்பிய ஒன்றிய ஆணைக்குழுவின் விசாரணைகளிலிருந்து தெரியவந்துள்ளது என்று இராஜதந்திரி ஒருவர் சர்வதேச செய்தி நிறுவனமொன்று தெரிவித்துள்ளார்.

ஐரோப்பிய ஒன்றியத்தின் பொதுவாக்கப்பட்ட சலுகைத் திட்டத்தின் (ஜி.எஸ்.பி.) கீழ் 16 வறிய நாடுகள் வர்த்தக சலுகைகளை பெற்றுக் கொண்டுள்ளன. இச்சலுகைகளைப் பெற்றுக் கொள்வதற்கு சமூக மற்றும் மனித உரிமை பேணல் போன்ற விடயங்களில் கடுமையான நிபந்தனைகளை பூர்த்தி செய்ய வேண்டும்.

சிறீலங்காவிற்கு வர்த்தக சலுகைகளை நிறுத்துவதற்காக கடந்த வாரம் எடுக்கப்பட்ட இத்தீர்மானத்தை, பெப்ரவரி மாதம் 16ம் திகதி ஒன்றுகூடும் ஐரோப்பிய நிதியமைச்சர்கள் அங்கீகரிக்கவுள்ளனர்.

உற்பத்தியாளர்களும் வர்த்தகர்களும் புதிய விதிகளுக்கேற்ப சீராக்கல்களை மேற்கொள்ள அவகாசம் கொடுக்கப்பட்டுள்ளது. இந்த கால அவகாசத்திற்குள் சிறீலங்காவும் இத்தீர்மானத்தை மறுபரிசீலனை செய்யும் வகையில் நடந்து கொள்வதற்கு ஒரு சந்தர்ப்பம் கிடைக்கிறது. சிறீலங்கா வரிச்சலுகையை மீண்டும் பெறுவதற்கென எடுக்கும் முயற்சிகளுக்கு தாங்களும் உதவ தயாராக இருப்பதாக மேற்படி இராஜதந்திரி தெரிவித்தார்.

எனினும், ஐரோப்பிய ஒன்றிய அதிகாரி ஒருவர் கருத்து தெரிவிக்கையில், 'வரிச்சலுகை நிறுத்தம் அமுல் செய்யப்படுவதை எதிர்வரும் 6 மாதங்களுக்குள் நிறுத்த முடியும். ஆனால் அதற்கு ஐரோப்பிய ஆணைக்குழுவின் சிபார்சும், அங்கத்துவ நாடுகளினது இணக்கமும் தேவை' என்று கூறினார். எவ்வாறாயினும், சிறீலங்கா மனித உரிமை பேணல் விடயத்தில் திருப்திகரமாக நடந்து கொள்ளவில்லை என்பது தற்போதைய அபிப்பிராயமாகும் என்றும் அவர் குறிப்பிட்டுள்ளார்.

இதேவேளை, விசாரணைகள் நடத்தப்பட்ட காலப்பகுதியில் இருந்து தற்போது சிறீலங்கா எவ்வளவோ திருந்தி விட்டதால் வரிச்சலுகையை நிறுத்துவதற்கான சம்பிரதாயபூர்வமான நடவடிக்கை எடுக்கப்படமாட்டாது என்று தாம் நம்புவதாக ஐரோப்பிய ஒன்றியத்திற்கான சிறீலங்காத் தூதுவர் தெரிவித்துள்ளார்.

வரிச் சலுகையை தற்காலிகமாக இரத்துச் செய்வது குறித்து ஐரோப்பிய ஒன்றியம் இன்னும் முறையான தீர்மானம் மேற்கொள்ளவில்லை எனவும் அதற்கு இம்மாத இறுதிவரை அவகாசம் உள்ளது எனவும் பெல்ஜியம், ஐரோப்பிய ஒன்றியம், மற்றும் லக்ஸம் போர்க்கிற்கான சிறீலங்காத் தூதுவர் ரவிநாத ஆரிய சிங்க கூறியுள்ளார். இதேவேளை சிறீலங்கா அரசாங்கம் இது தொடர்பில் அறிக்கை ஒன்றை விடுத்துள்ளது. அவ்வறிக்கையில், ஜி.எஸ்.பி. பிளஸ் போன்ற வர்த்தக சலுகைகளை முடிவுறுத்துவது சாதாரண இயந்திரம் போன்ற வேலையல்ல. அதனை தன்னிச்சையான முறையில் செய்து கொள்ளலாம். ஆனால் அதனைச் செய்யும்போது சம்பந்தப்பட்ட அரசியல் மற்றும் சமூக பொருளாதார பிரிவுகள் குறித்த புரிந்துணர்வுடன் தீர்மானிக்கப்பட வேண்டும் என்று எச்சரிக்கப்பட்டுள்ளது.

## இலங்கையில் அதிகரித்துள்ள வெளிநாட்டவர்கள்!
## இந்திய, சீன, பாகிஸ்தான் பிரசைகளே அதிகம்

இலங்கையில் விசா இன்றி வசிக்கும் வெளிநாட்டவர்கள் எண்ணிக்கை அதிகரித்துள்ளதாக தெரிவிக்கப்படுகின்றது. குறிப்பாக இந்திய, சீன, பாகிஸ்தான் நாட்டுப் பிரசைகளே அதிகம் இவ்வாறு தங்கியிருப்பதாக கூறப்படுகின்றது. இது குறித்து சிறீலங்காவின் குடிவரவு குடியகல்வுத் திணைக்களத்தின் உதவிக் கட்டுப்பாட்டதிகாரியும், விசாரணைப்பிரிவுத் தலைவருமான வில்லியம் தேவேந்திரராஜா தெரிவித்துள்ளதாவது, ஐரோப்பா, வட அமெரிக்கா, சார்க் ஆகிய பிராந்தியங்களில் தேர்ந்தெடுக்கப்பட்ட 84 நாடுகளிலிருந்து இலங்கை வருவோருக்கு வந்திறங்கியதும் விசா வழங்கும் வசதி ஏற்படுத்தப்பட்டுள்ளது என்றும் சிலர் பிரதானமாக இந்திய, பாகிஸ்தான், சீனா ஆகிய நாடுகளிலிருந்து வருவோர் இந்த வசதியை துஷ்பிரயோகம் செய்து வருகின்றனர்.

இந்த 84 நாடுகளிலிருந்து வரும் பிரயாணிகளுக்கும் சுற்றுலா பயணிகளுக்கும் இங்கு வந்திறங்கியதும் 30 நாட்களுக்கு இலவச விசா வழங்கப்படுகிறது. பின்னர் அவர்களது நாடுகளைப் பொறுத்து ஒரு நியாயமான கட்டணத்தில் மொத்தம் இரண்டு மாதங்களுக்கு அல்லது 90 நாட்களுக்கு அவர்களது விசாக் காலம் நீடிக்கப்படுகிறது. இத்தகைய வசதிகளுக்கு மத்தியிலும் பெருமளவிலான சுற்றுலா பயணிகள் சட்டத்தை மீறி இங்கு பணியாற்றிவரும் இந்தியர்கள், பாகிஸ்தானியர்கள் ஆகியோரிடம் தற்காலிக அடிப்படையில் வேலைசெய்து வருகிறார்கள். சீனர்கள் வீதிகளில் அலைந்து திரிகிறார்கள் அல்லது கசினோ சூதாட்ட கழகங்களில் சுற்றித் திரிகிறார்கள்.

சட்டத்தை மீறுவோர் உடனடியாக நாடுகடத்தப்படுவது மட்டுமன்றி மீண்டும் அவர்கள் இந்நாட்டுக்குள் பிரவேசிக்க முடியாதபடி அவர்களது பெயர் தண்டனைக்குரியவர்களது பட்டியலில் சேர்த்துக் கொள்ளப்படும் என்றும் தேவேந்திரராஜா கூறினார்.

## சிங்களவர்களின் உல்லாசபுரியாக யாழ்.

கடந்த இரண்டு வாரங்களில் மட்டு தென்னிலங்கையிலிருந்து 150,000 சிங்களவர்கள் யாழ்ப்பாணம் வந்து சென்றுள்ளதாக யாழ்ச் செய்திகள் தெரிவிக்கின்றன. தென்னிலங்கையிலிருந்து வரும் சிங்களவர்களால் கலாச்சார, சுகாதார சீர்கேடுகள் அதிகரித்து வருவதாகக் கூறப்படுகின்றது. கடந்த இரண்டு வாரங்களில் மட்டும் ஒன்றரை இலட்சம் சிங்களவர்கள் யாழ்ப்பாணம் வந்து சென்றுள்ளனர். இவர்களின் வருகையினால் விடுதிகளில் தங்குவதற்கு இடங்கள் இன்றி அவர்கள் தெருக்களிலும் படுத்துறங்கிவிட்டுச் செல்கின்றனர்.

தெருக்களில் தங்கியிக்கும் போது அவர்கள் அணியும் ஆடைகள், மற்றும் மலசலம் கழித்தல், உணவுக்கான கடதாசிகள், பொலித்தீன் பைகள், மதுப் போத்தல்கள், வெண்சுருட்டுக் கட்டைகள் போன்றவற்றை வீசிச் செல்வதால் சுகாதார சீர்கேடுகள் நிலவத் தொடங்கியுள்ளதாக தெரிவிக்கப்படுகின்றது. யாழ் நைனாதீவிற்கும் கசூரினா கடற்கரைக்கும் அதிகம் சிங்களவர்கள் சென்று திரும்புவதால் போக்குவரத்து நெருக்கடிகள் அதிகரித்துள்ளதாகவும் கூறப்படுகின்றது. இதேவேளை, யாழ் பல்கலைக்கழகத்துக்கு கூடுதல் சிங்கள, முஸ்லிம் மாணவர்களை அனுமதிப்பதற்கு நடவடிக்கை எடுத்து வருவதாக பல்கலைக்கழக மானியங்கள் ஆணைக்குழு தலைவர் பேராசிரியர் காமினி சமரநாயக்க தெரிவித்துள்ளார்.

# சதிவலைப் பின்னல்-2

சேரமான்

தமிழீழ தேசிய விடுதலைப் போராட்டத்தை அடுத்த படிநிலை நோக்கி நகர்த்திச் செல்வதற்கான மிகப்பெரும் கடப்பாட்டை இன்று புலம்பெயர்வாழ் தமிழீழ மக்கள் தாங்கிநிற்கின்றனர். பெருமெடுப்பிலான யுத்தத்தின் ஊடாக தமிழீழ தாயக பூமியை முழுமையாக ஆக்கிரமித்து, படைவழியில் தமிழீழ விடுதலைப் புலிகளை வெற்றிகொள்வதன் ஊடாகத் தமிழீழ தேசிய விடுதலைப் போராட்டத்திற்கு முற்றுப்புள்ளி வைக்க முடியும் என்று சிங்கள அரசும், அதற்கு முண்டுகொடுத்து நிற்கும் பிராந்திய – உலக வல்லாதிக்க சக்திகளும் போட்ட கணக்குகளை தவிடு பொடியாக்கிவிடக்கூடிய மிகப்பெரும் சக்தியாக இன்று புலம்பெயர்வாழ் தமிழீழ மக்கள் திகழ்கின்றார்கள் எனக்கூறின் அது மிகையில்லை.

இறையாண்மை பொருந்திய சுதந்திரத் தமிழீழத் தனியரசை நிறுவுவதற்கு மக்களாணை கோரி மேற்குலக தேசங்கள் தோறும் முன்னெடுக்கப்படும் பொதுக்கருத்து வாக்கெடுப்புக்களில் உணர்வெழுச்சியுடன் கலந்து கொண்டு தமது அரசியல் அபிலாசைகளை இலட்சிய உறுதியுடன் புலம்பெயர்வாழ் தமிழீழ மக்கள் வெளிப்படுத்தி வருவது இதற்கு சான்றுபகர்கின்றது.

இவ்வாறு தமிழீழ தேசிய விடுதலைப் போராட்டத்தின் முதுகெலும்பாகப் புகலிடத் தமிழீழ மக்கள் பரிணமித்து நிற்பதையிட்டு நாம் பெருமிதம் கொண்டாலும், புலம்பெயர்வாழ் தமிழீழ மக்களை நேரடியாகக் குறிவைத்து மிகவும் நுண்ணியமான சதிவலைப் பின்னலை சிங்கள அரசும், அதற்கு முண்டுகொடுத்து நிற்கும் வல்லாதிக்க சக்திகளும் வனையத் தொடங்கியிருப்பதை நாம் அலட்சியம் செய்துவிட முடியாது. 2002ஆம் ஆண்டில் நோர்வே அரசின் அனுசரணையுடன் தமிழீழ விடுதலைப் புலிகளுக்கும், சிங்கள அரசுக்கும் இடையில் போர்நிறுத்த உடன்படிக்கை கைச்சாத்திடப்பட்ட மறுகணமே தமிழீழ தேசிய விடுதலைப் போராட்டத்தை சிதைப்பதற்காகக் களமிறக்கப்பட்ட பன்னாட்டு வலைப்பின்னலை ஒத்தவடிவில் இரண்டாவது சதிவலைப் பின்னல் வனையப்படுகின்றது. இதில் காட்சிகளும், பாத்திரங்களும் மட்டும் மாறியுள்ளனவே தவிர, இதன் இலக்கு என்பது தமிழீழ தேசிய விடுதலைப் போராட்டத்தை சிதைப்பதையே நோக்கமாகக் கொண்டுள்ளது.

*தர்மத்தின்பால் நின்று நாம் எமது தேசிய விடுதலைப் போராட்டத்தை முன்னெடுத்த பொழுதும், எம்மை ஏன் உலகம் புறக்கணித்தது?*

*நீதியின்பால் நின்று போராடிய எமக்குத் துணைநிற்பதை விடுத்து எதற்காக அநீதியின்பால் நிற்கும் சிங்கள தேசத்திற்கு உலகம் துணைபோனது?*

*எமது உறவுகள் வகைதொகையின்றி கொன்றுகுவிக்கப்பட்ட பொழுது ஏன் உலகம் பாராமுகம் காட்டியது?*

என்ற கேள்விகள் இன்றும்கூட எம்மவரிடையே விடை தெரியாத வினாக்களாகத் தொக்கிநிற்கின்றன.

உலக ஒழுங்கிற்கு இசைவாகத் தமது போராட்ட வடிவத்தைத் தமிழீழ விடுதலைப் புலிகள் மாற்றியமைக்கத் தவறியமையே இவ்வாறான நிலைக்குக் காரணம் என்று கற்பிதம்செய்து, தமிழீழ விடுதலைப் புலிகள் மீது பழி சுமத்திக் குளிர்காய முற்படும் சிறுகூட்டம் ஒருபுறம் கதையளந்து கொண்டிருக்க, தமிழீழத் தேசியத் தலைவரின் இருப்பை மறுதலித்து, தமிழீழ விடுதலைப் புலிகளுக்கு சமாதிகட்டி, இராசதந்திரப் போராட்டம் என்ற புதிய மாயமானை புலம்பெயர்வாழ் தமிழீழ மக்கள் மீது ஏவிவிடுவதற்கான முனைப்புக்களில் மற்றுமொரு கும்பல் முழுவீச்சுடன் ஈடுபட்டு வருகின்றது. சிங்கள – இந்திய அரசுகளின் திரைமறைவு அனுசரணையுடன் செயற்படும் இக்கும்பல், மே 18ற்கு முன்னர் தமிழீழ விடுதலைப் புலிகளின் பன்னாட்டுக் கிளைகளை மையப்படுத்தி இயங்கிய புகலிடத் தமிழீழ சமூக அமைப்புக்களிடையே பிளவுகளை ஏற்படுத்துதல், தெரிவுசெய்யப்பட்ட காட்சி ஊடகங்கள் வாயிலாக புகலிடத் தமிழீழ மக்களிடையே குழப்பத்தைத் தோற்றுவித்தல் போன்ற நாசகார நடவடிக்கைகளை கனக்கச்சிதமாக நகர்த்தி வருகின்றது.

தமிழீழ தேசிய விடுதலைப் போராட்டத்தின் அடிநாதமாகவும், ஆணிவேராகவும், இறையாண்மை பொருந்திய சுதந்திரத் தமிழீழத் தனியரசை நிறுவுவதற்கான வட்டுக்கோட்டைத் தீர்மானம் திகழ்வதோடு, அதனை நகர்த்திச் செல்வதற்காக வலுவான அச்சாணியாகத் தமிழீழ தாயகம், தமிழீழ தேசியம், தமிழீழ தன்னாட்சியுரிமை ஆகிய முப்பரிமாணங்களைக் கொண்ட திம்புக் கோட்பாடு விளங்குகின்றது. இந்த வகையில், பிரதேசவாதங்களுக்கு அப்பாற்பட்ட பிளவுபடாத – ஒன்றுபட்ட தமிழீழ தாயகம், மதபேதங்களுக்கு அப்பாற்பட்ட தமிழீழ தேசியம், இறையாண்மையை நிலைநாட்டும் தன்னாட்சியுரிமை என்ற மூன்று வலுவான தளங்களில் அர்த்தபரிமாணம் கொண்டுள்ள தமிழீழ தேசிய விடுதலைப் போராட்டத்தின் இயங்கு சக்தி, கடந்த மூன்று தசாப்தங்களாக தமிழீழ விடுதலைப் புலிகளால் நகர்த்தப்பட்டு வருகின்றது.

ஒருபுறம், முள்ளிவாய்க்கால் யுத்தத்துடன் தமிழீழ விடுதலைப் புலிகளின் சகாப்தம் முடிவுக்கு வந்திருப்பதாக சிங்களம் மார்தட்டிக்கொண்டாலும், புலம்பெயர்வாழ் தமிழீழ மக்களின் பலத்துடன் மீண்டும் தமிழீழ விடுதலைப் புலிகள் உயிரூட்டம் பெற்றுவிடக் கூடும் என்ற அச்சவுணர்வில் இருந்து அது நீங்கிவிடவில்லை. இவ்வாறான அச்சவுணர்வு சிங்கள அரசை மட்டுமன்றி இந்தியப் பேரரசையும் பீடித்திருப்பதை நாம் மறந்துவிட முடியாது. இவ்வாறான பின்புலத்தில் இறையாண்மை பொருந்திய சுதந்திரத் தமிழீழத் தனியரசை நிறுவுவதற்கான மக்களாணையை மேற்குலக சனநாயகப் பொறிமுறைகள் ஊடாக புலம்பெயர்வாழ் தமிழீழ மக்கள் வெளிப்படுத்துவது சிங்கள – இந்திய அரசுகளின் வயிற்றில் புளியைக் கரைக்கும் செய்தியாக மாறியிருப்பதே மெய்யுண்மையாகும்.

**புலம்பெயர்வாழ் தமிழீழ மக்களைப் பலவீனப்படுத்தி, தமிழீழ விடுதலைப் புலிகளின் பன்னாட்டுக் கட்டமைப்புக்களுக்கு மாற்றீடான மிதவாதக் கட்டமைப்பு ஒன்றை நிறுவி, அதன் ஊடாக தமிழீழ தேசிய விடுதலைப் போராட்டத்தை சிதறடிப்பதே சிங்கள – இந்திய அரசுகள் வனையும் சதிவலைப் பின்னலின் மைய இலக்காகத் திகழ்கின்றது.**

இதுவே தமிழீழத் தனியரசுக்கான பொதுக்கருத்து வாக்கெடுப்புக்களை சிறுமைப்படுத்தியும், அதற்கு மாற்றீடான திட்டங்களை முன்வைத்தும் தமது நாசகார நடவடிக்கை இயந்திரங்களை சிங்கள – இந்திய அரசுகள் இயக்கி வருவதற்கான நதிமூலமாகத் திகழ்கின்றது. தமிழீழ தேசிய விடுதலைப் போராட்டம் என்ற காலநதியை நகர்த்திச் செல்லும் சாரதிகளாக வகிபாகமெடுத்துள்ள புலம்பெயர்வாழ் தமிழீழ மக்களைப் பலவீனப்படுத்தி, தமிழீழ விடுதலைப் புலிகளின் பன்னாட்டுக் கட்டமைப்புக்களுக்கு மாற்றீடான மிதவாதக் கட்டமைப்பு ஒன்றை நிறுவி, அதன் ஊடாக தமிழீழ தேசிய விடுதலைப் போராட்டத்தை சிதறடிப்பதே சிங்கள – இந்திய அரசுகள் வனையும் சதிவலைப் பின்னலின் மைய இலக்காகத் திகழ்கின்றது.

இதன் முதற்கட்டமாக தமிழீழ தாயக பூமியை மத அடிப்படையில் கூறுபோட்டுத் துண்டாடுவதற்கான கருத்துக்களை விதைத்தல், புலம்பெயர்வாழ் தமிழீழ மக்களின் அரசியல் – பரப்புரைப் பணிகளை மேற்குலக சட்டவரையறைகளுக்குள் முடக்குதல், ஆயுதப் போராட்டத்தை அருவருக்கத்தக்க விடயமாக சிறுமைப்படுத்தும் கருத்துக்களைப பரப்புதல் போன்ற செயற்பாடுகளை சிங்கள – இந்திய அரசுகளின் கைக்கூலிகள் மும்முரமாக முன்னெடுத்து வருகின்றனர். புத்திஜீவிகள், இலக்கியவாதிகள், சமூக சிந்தனையாளர்கள், ஊடகவியலாளர்கள் என்று தமக்குத் தாமே பட்டமளிப்புச் செய்துகொள்ளும் இவர்கள், தமிழீழ தேசிய விடுதலைப் போராட்டத்தின் அடிப்படைக் கோட்பாடுகளையும், இலட்சியங்களையும் சிதறடிப்பதை குறியாகக் கொண்டு செயற்படுவதை இவர்களின் அண்மைக்கால அறிக்கைகளும், நடவடிக்கைகளும் புலப்படுத்துகின்றன.

பிராந்திய – உலக வல்லாதிக்க சக்திகளின் கவசப் பாதுகாப்பில் இருந்து எழுந்த படை வலிமையின் ஊடாக இன்று தமிழீழ தாயக பூமியை சிங்கள அரசு ஆக்கிரமித்துள்ள பொழுதும், தமிழீழ விடுதலைப் புலிகள் இயக்கம் என்பது இக்கணம் வரை அழிக்கப்பட முடியாத சக்தியாகவே தொடர்ந்தும் விளங்குகின்றது. நிலங்களையும், தனது இயங்கு தளத்தையும் ஒரு விடுதலை இயக்கம் இழந்தாலும், அதன் அரசியல் இலட்சியங்களும், போராட்ட வடிவமும், மக்களின் உறுதுணையும் அழிக்கப்படாத வரைக்கும் அது தனது பலத்தை இழந்துவிடுவதில்லை. இந்தப் பண்பியல்பே இன்று தமிழீழ விடுதலைப் புலிகளின் பலமாகவும், தமிழீழ தேசிய விடுதலைப் போராட்டத்தின் அடுத்தகட்டப் பாய்ச்சலுக்கான அடித்தளமாகவும் திகழ்கின்றது.

இதேபோன்று, தமிழீழ தேசியத் தலைமையை அழித்துவிட்டதாக சிங்களம் மார்தட்டிக் கொள்கின்ற பொழுதும், உலகத் தமிழர்களை இயக்கும் மாபெரும் இயங்கு சக்தியாகத் தொடர்ந்தும் தமிழீழத் தேசியத் தலைவர் மேதகு வே.பிரபாகரன் அவர்கள் திகழ்வதை நிகழ்கால சம்பவங்கள் எடுத்தியம்புகின்றன. அந்த மாபெரும் சக்தி மீது அசையாத நம்பிக்கை கொண்ட தேசமாகத் தமிழீழ தேசம் திகழ்வதை நிதர்சனப்படுத்தும் சம்பவங்களாகத் தமிழீழத்தில் நிகழ்ந்தேறிய சிங்கள தேசத்தின் அதிபர் தேர்தல் மீதான புறக்கணிப்பும், புகலிட தேசங்களில் நிகழ்ந்தேறிய தனியரசுக்கான பொதுக்கருத்து வாக்கெடுப்புக்களில் ஏகமனதாக வழங்கப்பட்ட மக்களாணையும் விளங்குகின்றன.

இவ்வாறாக தமிழீழ தேசிய விடுதலைப் போராட்டத்தின் அடிநாதமாகத் திகழும் தமிழீழ விடுதலைப் புலிகளின் அரசியல் போராட்ட செல்நெறியைப் பாதுகாப்பது இன்று ஒவ்வொரு புலம்பெயர்வாழ் ஈழத்தமிழர்களின் முதன்மைக் கடப்பாடாகத் திகழ்கின்றது. இதன் முதற்கட்டமாக தமிழீழ தேசிய விடுதலைப் போராட்ட அரசியற்களத்தைக் கூறுபோட்டு சிதறடிப்பதை இலக்காகக் கொண்டு இயங்கும் கும்பல்களை விழிப்புணர்வுடன் அடையாளம்கண்டு, இவர்களை அந்நியப்படுத்தி, நிரந்தரமாக ஓரங்கட்டுவதே புலம்பெயர்வாழ் தமிழீழ மக்களின் முன்னுள்ள மிகச்சிறந்த தெரிவாகும். இதனைவிடுத்து தமிழீழ விடுதலைப் புலிகளின் அரசியல் போராட்ட செல்நெறிக்கு மாற்றீடாக முளைவிட முற்படும் அபாயகரமான பல்தேசியக் கட்டமைப்புக்கள் பிரசவம் பெறுவதற்கான புறச்சூழலுக்கு வழிகோலுவது, சிங்களம் வனையும் இரண்டாது சதிவலைப் பின்னலுக்குள் தமிழீழ தேசிய விடுதலைப் போராட்டத்தை இட்டுச்செல்லும் அபாயத்தன்மையைக் கொண்டுள்ளது. இது எமது தலையில் நாமே மண்வாரும் செய்கையாக அமைந்துவிடும்!

(தொடரும்)

# வீடு வாங்கவும், விற்கவும்.......




**$376.26 / Mo** Mortgage
**Scarborough**
1 Bedroom, 1 Washroom
Scarborough, Luxury Condo,
Asking $119,900
[5 % Down, 1.99% interest, 1 yr closed, 35 yr amor]

**$580.24 / Mo** Mortgage
**Scarborough**
2 Bedrooms, 2 Washrooms
Renovated Throughout The Unit
Asking $159,900
[5 % Down, 1.99% interest, 1 yr closed, 35 yr amor]

**$627.31 / Mo** Mortgage
**Scarborough**
2+1 Bedrooms, 2 Washrooms
Luxury Condo, Ap. 1220 Sq Ft
Asking $199,900
[5 % Down, 1.99% interest, 1 yr closed, 35 yr amor]

**$784.22 / Mo** Mortgage
**Scarborough**
3+2 Bedrooms, 2 Washrooms
Close to Scarb U Of T,
Centennial College
[5 % Down, 1.99% interest, 1 yr closed, 35 yr amor]

## WHY RENT???

**$751.86 / Mo** Mortgage
**Markham**
**Asking $252,900**
2 Bedrooms, 2 Washrooms
Beautiful Low Rise Bright
Ground Floor Corner Unit
[10 % Down, 1.99% interest, 1 yr closed, 35 yr amor]

**$1114 / Mo** Mortgage
**Markham**
3+1 Bedrooms, 5 Washrooms
Huge Driveway Without Sidewalk
Asking $375,000
[10 % Down, 1.99% interest, 1 yr closed, 35 yr amor]

**$1187.7/ Mo** Mortgage
**Mississauga**
3 Bedrooms, 3 Washrooms
One Minute To Hwy 403, 410 &
401, Asking $399,500
[10 % Down, 1.99% interest, 1 yr closed, 35 yr amor]

**$1426.73 / Mo** Mortgage
**Markham**
**Asking 479,900**
4 Bedrooms, All Brick! Detached!
9th Lane / 14th Avenue
Hardwood In Liv.&Din.!
[10 % Down, 1.99% interest, 1 yr closed, 35 yr amor]



## SIVA KANDIAH

Sales Representative
**Cell: 416 301 9540**
**Office: 416 298 3200**

**HomeLife Today Realty Ltd.,**
Brokerage, INDEPENDENTLY OWNED AND OPERATED
31 Progress Avenue, Suite 210, Toronto, ON M1P 4S6

**Hey ! This Guy Can Do It Better**

# ஈசன்ஸ் பேரூந்துச் சேவை






## WE DO ALL KINDS OF CHARTER SERVICE

## (416) 803-8798
## (514) 830-8793

**கனடிய அரசின் அங்கீகாரம்பெற்ற நிறுவனம்**

கடிதங்கள், பொதிகள், சுற்றுலாக்கள், உல்லாசப் பயணங்கள், கொண்டாட்டங்கள் போன்ற உங்கள் அனைத்துப் போக்குவரத்து தேவைகளுக்கும் எங்கள் சேவைகளை நாங்கள் வழங்குகின்றோம்!

குறிப்பிட்ட பிரதேசங்களிற்குள் மட்டுமே ஏற்றும், இறக்கும் சேவைகள் வழங்கப்படும்.

**PICK-UP & DROP OFF LIMITED AREAS ONLY**

முற்கூட்டிய பதிவுகள் அல்லது மேலதிக விபரங்களுக்கு நீங்கள் எம்முடன்
காலை 10:00 மணி முதல் நள்ளிரவு 1:00 மணிவரை தொடர்பு கொள்ளுங்கள்.

பயணத்தின் ஆரம்பம் முதல் தரப்பிடம் வரை புத்தம்புதிய திரைப்படங்களைப் பார்த்து ரசித்தபடி பயணிக்கும் வண்ணம் DVD வசதியுடன் சேவையை வழங்கும் ஒரே நிறுவனம்!

# மகிந்தவின் அரசியலும் இராணுவத்திற்குள் ஏற்பட்டுள்ள முரண்பாடுகளும்

- வேல்ஸ் இல் இருந்து அருஷ்





அனைத்துலகத்தின் பார்வைகளின் மையப்புள்ளியாக முன்னர் மத்திய கிழக்கு வளைகுடா நாடுகளும், ஆபிரிக்கா நாடுகளும் திகழ்ந்தன. ஆனால் தற்போது சிறீலங்கா உருவெடுத்துள்ளது.

கடந்த திங்கட்கிழமை (8) நூற்றுக்கணக்கான இராணுவத்தினர் கொழும்பின் மையப் பகுதியில் உள்ள எதிர்க்கட்சிகளின் பொது வேட்பாளர் ஜெனரல் பொன்சேகாவின் அலுவலகத்தை சுற்றிவளைத்து அவரை கைது செய்தனர். பின்னர் வெளியில் நிறுத்தப்பட்டிருந்த இராணுவ கவசவாகனத்திற்குள் வைத்து தாக்கிய பின்னர் இனம் தெரியாத இடத்திற்கு கொண்டு சென்றுள்ளனர்.

காலிலும், மார்பிலும் காயமடைந்த பொன்சேகா, கடற்படைத் தலைமையகத்தில் தடுத்துவைக்கப்பட்டுள்ளார். அங்கு அவர் துன்புறுத்தப்படுவதாக கொழும்புத் தகவல்கள் தெரிவித்துள்ளன. சிறீலங்கா அரசின் இந்த நடவடிக்கையானது எதிர்பார்க்கப்பட்ட ஒன்றாகவே இருந்தபோதும் எதிர்த்தரப்புக்கும், அனைத்துலகத்திற்கும் பலத்த பின்னடைவாகும்.

கடந்த மாதம் 26 ஆம் நாள் தேர்தல் நிறைவுபெற்றதும், சிறீலங்கா அரசு முதலில் இராணுவ கட்டமைப்புக்குள்ளும், பின்னர் காவல்துறை கட்டமைப்புக்குள்ளும் களையெடுப்புக்களை மேற்கொண்ட பின்னரே பொன்சேகா மீதான கைது நடவடிக்கையை மேற்கொண்டுள்ளது.

இதன் மூலம் பொன்சேகாவின் கைதினால் இராணுவத்திற்குள் ஏற்படும் முரண்பாடுகளை குறைப்பதற்கு அரசு முழு நடவடிக்கையையும் எடுத்திருந்தது.

சிறீலங்கா இராணுவத்தில் சேவையில் இருந்த பெருமளவான உயர் அதிகாரிகள் விலக்கப்பட்டது இது இரண்டாவது தடவை. 1999 ஆம் ஆண்டும் பெருமளவான களமுன்னணித் தளபதிகள் விலக்கப்பட்டனர். ஆனால் அப்போது படைத்துறை காரணங்கள் முன்வைக்கப்பட்ட போதும், தற்போது அரசியல் காரணங்கள் முன்வைக்கப்பட்டுள்ளதாக தெரிவிக்கப்படுகின்றது.

ஏறத்தாக 40 இராணுவ உயர் அதிகாரிகள் இடமாற்றம் செய்யப்பட்டதுடன், 208 காவல்துறை அதிகாரிகளும் இடமாற்றம் செய்யப்பட்டுள்ளனர். மேலும் அரசிற்கு எதிராக செயற்பட்டுள்ளனர் என்ற அரசியல் காரணங்களை முன்வைத்து சிறீலங்கா இராணுவத்தில் இருந்து 14 அதிகாரிகள் விலக்கப்பட்டுள்ளனர்.

இந்த அதிகாரிகளில் 5 மேஜர் ஜெனரல்கள், 5 பிரிகேடியர்கள், ஒரு கேணல், ஒரு லெப்.கேணல், இரண்டு கப்டன் தர அதிகாரிகள் உள்ளடங்கியுள்ளனர்.

1992 ஆம் ஆண்டு உருவாக்கப்பட்ட இராணுவச்சட்டத்தின் பிரகாரம் இராணுவத் தளபதி இந்த நடவடிக்கையை மேற்கொண்டுள்ளார்.

இவ்வாறு விலக்கப்பட்டவர்கள் ஓய்வு பெற விண்ணப்பிக்கலாம் அல்லது பதவியை விட்டு விலகலாம். அவ்வாறு விண்ணப்பம் செய்பவர்கள் பாதுகாப்பு செயலாளருடன் கலந்தாலோசித்து அதனை மேற்கொள்ளலாம். அரச தலைவர் தேர்தலின் பின்னர் விலக்கப்பட்ட அதிகாரிகள் வருமாறு:

**மேஜர் ஜெனரல் ஜம்மிக்கா லியனகே –** இராணுவ துணை படைக் கட்டளை அதிகாரி.

**மேஜர் ஜெனரல் ராஜிதா டி சில்வா –** பிரதம பாதுகாப்பு அதிகாரியின் உதவி அதிகாரி.

**மேஜர் ஜெனரல் ஜயந்தா பெரேரா –** சீனாவில் உள்ள தேசிய பாதுகாப்பு பயிற்சி கல்லூரியில் பயிற்சி பெற்றுக் கொண்டிருந்த சமயம் திருப்பி அழைக்கப்பட்டுள்ளார்.

**மேஜர் ஜெனரல் சமந்தா சூரியபண்டாரா –** முன்னாள் 53வது படையணியின் கட்டளை தளபதி, தற்போது வாசிங்டனில் உள்ள சிறீலங்கா தூதரகத்தின் பாதுகாப்பு ஆலோசகர்.

**மேஜர் ஜெனரல் மகேஸ் சேனாநாயக்கா** – இராணுவ தலைமையகத்தின் பிரதம அதிகாரி.

**பிரிகேடியர் பிமல் டயஸ்**
– முல்லைத்தீவு மாவட்ட கட்டளைத் தளபதி.

**பிரிகேடியர் துமிந்தா கெப்படிவலனா**
– அம்பாறை மாவட்ட இராணுவ பயிற்சி கல்லூரி கட்டளை அதிகாரி.

**பிரிகேடியர் ஜனகா மகோத்தி**
– 22வது படையணியின் விநியோக இணைப் பதிகாரி.

**பிரிகேடியர் அத்துலா ஹென்னெடிகே**
– 22வது படையணியின் 1வது பிரிகேட்டின் கட்டளைத் தளபதி.

**பிரிகேடியர் வசந்தா குமரப்பெருமா**
– 55வது படையணியின் 3வது பிரிகேட்டின் கட்டளைத் தளபதி.

**கேணல் திலக் உபயவர்த்தனா –**
இராணுவக் காவல்துறை கட்டளை அதிகாரி.

**லெப்.கேணல் எல்.ஜே.எம்.சி.பி.ஜெயசுந்தரா**
– விஜயபா இலகுகாலாட்படை றெஜிமென்ட் பற்றாலியன் கட்டளை அதிகாரி.

**கப்டன் ஆர் எம் ஆர் ரணவீரா**
– விஜயபா இலகுகாலாட்படை றெஜிமென்ட் தாக்குதல் கொம்பனியின் கட்டளை அதிகாரி.

**கப்டன் பி கிருசாந்தா**
– தேசிய காவல்படை கொம்பனியின் கட்டளை அதிகாரி.

சிறீலங்காவின் வரலாற்றில் பெருமளவான படையினர் இராணுவத்தை விட்டு விலக்கப்படுவது இது இரண்டாவது தடவையாகும்.

1999 ஆம் ஆண்டு காலப்பகுதியில் விடுதலைப்புலிகள் மேற்கொண்ட ஓயாத அலைகள் மூன்று நடவடிக்கையை தொடர்ந்து சிறீலங்கா இராணுவம் இராணுவ விசாரணைகளை மேற்கொண்டு பெருமளவான அதிகாரிகளை கட்டாய ஓய்வில் அனுப்பியிருந்தது.

அன்றைய அரச தலைவர் சந்திரிகா குமாரணதுங்காவின் உத்தரவுக்கு அமைவாக இராணுவத் தளபதி சிறீலால் வீரசூரியா அதனை மேற்கொண்டிருந்தார்.

இராணுவ நீதிமன்ற விசாரணைகளை மேற்கொண்ட அன்றைய இராணுவத்தின் தலைமை அதிகாரி லயனல் பலகல்ல, 7 மூத்த அதிகாரிகளை இராணுவத்தில் இருந்து நீக்கியிருந்தார். அன்று நீக்கப்பட்ட அதிகாரிகள் விபரங்கள் வருமாறு:

**மேஜர் ஜெனரல் வசந்த பெரேரா**
– வன்னி மாவட்ட கட்டளை தளபதி.

**மேஜர் ஜெனரல் காமினி குணசேகரா**
– 56வது படையணியின் கட்டளைத் தளபதி.

**பிரிகேடியர் ரி எம் பொஹான்**
– 55வது படையணியின் கட்டளைத் தளபதி.

**கேணல் அதுலா லங்காதேவா**
– 56வது படையணியின் 1வது பிரிகேட்டின் கட்டளைத் தளபதி.

**மேஜர் பி.வி.யூ.சந்திரசிறீ**
– சிறீலங்கா தேசிய பாதுகாப்பு காவல் படையின் 20வது பற்றாலியன் கட்டளை அதிகாரி.

**மேஜர் மோரா முடலி**
– கெமுனுவோச் 11வது பற்றலியின் பிரதி கட்டளைத் தளபதி.

**மேஜர் எம் எ இலங்கசிங்கா**
– சிங்க றெஜிமென்ட் 15வது பற்றாலியனின் கட்டளை அதிகாரி.

1999 ஆம் ஆண்டு வன்னி படை நடவடிக்கையில் ஏற்பட்ட தோல்விக்கு பொறுப்பானவர்கள் என்ற காரணத்தினால் மேற

(38ம் பக்கம் பார்க்க)

**சிறீலங்காவின் நாடாளுமன்றத் தேர்தலில் வெற்றிபெற்று மகிந்த தனது சொந்த நாடாளுமன்றத்தை உருவாக்க முனைகின்றார் என்ற குற்றச்சாட்டுக்கள் எழுந்துள்ளன. ஆனால் எதிர்க்கட்சிகள் முற்றாக முடக்கப்பட்ட நிலையில், சிறீலங்கா சீனாவின் மற்றுமொரு பர்மாவாக மாற்றம் பெறுவதை மேற்குலகம் அனுமதிக்கப்போகின்றதா? என்பதில் தான் பொன்சேகாவின் எதிர்காலம் தங்கியுள்ளது.**

## இராணுவப் பேச்சாளராக பிரிகேடியர் பிரசாத் சமரசிங்க

சிறீலங்கா இராணுவப் பேச்சாளராக பிரிகேடியர் பிரசாத் சமரசிங்க நியமிக்கப்பட்டுள்ளார். இராணுவப் பேச்சாளராக இருந்த பிரிகேடியர் உதய நாணயக்கார இராணுவத்தின் பிரதம களப்பொறியியலாளராக நியமிக்கப்பட்டுள்ளார். முன்னர் இராணுவப் பேச்சாளராக இருந்த பிரிகேடியர் பிரசாத் சமரசிங்க, இலண்டனிலுள்ள சிறீலங்காத் தூதரகத்தின் இராணுவ ஆலோசகராக நியமிக்கப்பட்டிருந்தார். இதனால் ஏற்பட்ட வெற்றிடத்திற்கே பிரிகேடியர் உதய நாணயக்கார இராணுவப் பேச்சாளராக நியமிக்கப்பட்டிருந்தார். அங்கிருந்து திரும்பிய பிரிகேடியர் பிரசாத் சமரசிங்க இராணுவத்தின் பிரதான தொலைத்தொடர்பு அதிகாரியாகவும் சமிக்ஞை அதிகாரியாகவும் நியமனம் பெற்றிருந்தார். தற்போது அவர் வகிக்கும் பதவிக்கு மேலதிகமாக இராணுவப் பேச்சாளர் நியமனமும் வழங்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.



## நாடாளுமன்றத்தில் தமிழ் பிரதிநிதித்துவத்தை குறைக்க சதி

எதிர்வரும் பொதுத்தேர்தலின் போது வடக்கு, கிழக்கு மாவட்டங்களிலுள்ள தமிழ் மக்களின் வாக்குகளை சிதறச் செய்து, நாடாளுமன்ற தமிழ் பிரதிநிதித்துவத்தை கணிசமான அளவு குறைக்கும் நடவடிக்கைகளில் திரைமறைவுச் சதி ஒன்று தீட்டப்பட்டு வருவதாக வன்னி மாவட்ட நாடாளுமன்ற உறுப்பினர் வினோநோதாரலிங்கம் தெரிவித்துள்ளார். இது குறித்து அவர் விடுத்துள்ள அறிக்கையில் மேலும் தெரிவிக்கப்பட்டுள்ளதாவது,. நடந்து முடிந்த ஜனாதிபதித் தேர்தலில் வட, கிழக்கு தமிழ் மக்கள் ஒன்றுபட்டு, ஓரணியாக மீண்டும் இணைந்து கொண்டுள்ளதை ஜீரணிக்க முடியாதவர்களும், கூட்டமைப்புடன் தமிழ் மக்கள் சங்கமித்துப் போவதை தடுக்க முனைபவர்களுமே என்ன விலை கொடுத்தேனும் இவ் இரகசியத் திட்டத்தை அரங்கேற்ற முயல்கின்றனர் என்றும், வட-கிழக்கின் ஒவ்வொரு தேர்தல் மாவட்டங்களிலும் குறிப்பாக வன்னி, மட்டக்களப்பு மாவட்டங்களில் குறைந்தபட்சம் தலா மூன்று சுயேட்சை வேட்பாளர் குழுக்களை நிறுத்துவதன் மூலம் தமிழ் பிரதிநிதித்துவத்தை தகர்க்க திட்டங்கள் தீட்டப்படுகின்றன என்றும் தெரிவித்துள்ளார்.

## மேலும் 45 இலங்கையர் கிறிஸ்மஸ் தீவுக்கருகில் மீட்பு

அவுஸ்திரேலியாவில் புகலிடம் தேடி படகொன்றில் சென்றுகொண்டிருந்த மேலும் 45 இலங்கைத் தமிழர்கள் அவுஸ்திரேலியாவின் கிறிஸ்மஸ் தீவுக்கருகில் கடந்த 6ம் திகதி மீட்கப்பட்டதாக அறிவிக்கப்பட்டுள்ளது. அப்படகிலிருந்து கிடைத்த இடர்கால சமிக்ஞைகளைத் தொடர்ந்து அவுஸ்திரேலிய பாதுகாப்புப் படையொன்றின் கப்பலினால் மேற்படி அகதிகள் மீட்கப்பட்டதாக தெரிவிக்கப்படுகிறது. மேற்படி அகதிகள் ஜனவரி 20ம் திகதி இலங்கையிலிருந்து புறப்பட்டதாகவும் கடந்த நான்கு நாட்கள் அவர்கள் உணவு, நீர் எதுவுமின்றி தவித்ததாகவும் அவுஸ்திரேலியாவின் அகதிகள் செயற்பாட்டுக் கூட்டமைப்பின் பேச்சாளர் ஒருவர் தெரிவித்துள்ளார். மீட்கப்பட்ட அகதிகள் அனைவரும் கிறிஸ்மஸ் தீவிலுள்ள அகதிகள் தடுப்பு நிலையத்திற்கு அழைத்துச் செல்லப்படவுள்ளதாகவும் மேற்படி அகதிகளில் சிலர் அம்மை நோய் மற்றும் வயிற்றோட்டத்தினால் பாதிக்கப்பட்டிருப்பதாகவும் மேற்படி பேச்சாளர் கூறியுள்ளார்.

## நாமல் ராஜபக்ச பொதுத்தேர்தலில் போட்டியிடத் தீர்மானம்

ஜனாதிபதி மகிந்த ராஜபக்சவின் புதல்வர் நாமல் ராஜபக்ச எதிர்வரும் ஜனாதிபதித் தேர்தலில் போட்டியிடுவதற்கான தனது விண்ணப்பப்படிவத்தை ஐக்கிய மக்கள் சுதந்திரக் முன்னணியிடம் கையளித்துள்ளார்.



எதிர்வரும் பொதுத் தேர்தலில் அம்பாந்தோட்டை மாவட்டத்தில் நாமல் ராஜபக்ச போட்டியிடவுள்ளதாக `இளைஞர்களுக்கு நாளை` அமைப்பின் செயலாளர் அசேல திஸாநாயக்க அரச தகவல் திணைக்களத்துக்குத் தெரிவித்துள்ளார். குடும்ப ஆட்சிக்குள் நுழையும் மேலும் ஒருவர்.

## தமிழ் மக்களை ஏமாற்ற பிள்ளையான் புதுவழி

எதிர்வரும் சிறீலங்காவின் பொது தேர்தலில் தமிழ் மக்களது வாக்குகளை பெறவேண்டுமாயின் அவர்களை ஏமாற்ற தனித்து போட்டியிடவேண்டும். அப்போதுதான் வெல்ல முடியும், வென்ற பின்னர் வருகின்ற அரசுடன் கூட்டு சேரலாம் என்பதே பிள்ளையான் இராணுவ துணைக் குழுவின் கூடுதலான அங்கத்தவர் விருப்பமாம். இது தொடர்

→ 15

# இந்திய மத்திய உள்துறை அமைச்சரின் கருத்து பொய்யாகியது

# காப்பாற்ற சிறீலங்கா முயற்சி

பிரபாகரன் உயிரிழந்துவிட்டதாகவும் அவரது மரணம் தொடர்பான சான்றிதழை சிறீலங்கா வழங்கிவிட்டதாகவும் தன்னிடம் சி.பி.ஐ உறுதிப்படுத்தியதாக அண்மையில் கருத்து வெளியிட்டிருந்தார் இந்திய மத்திய உள்துறை அமைச்சர் ப.சிதம்பரம். தகவல் பெறும் உரிமைச் சட்டத்தின் கீழ் கேட்கப்பட்ட ஒரு கேள்விக்கு பதில் அளித்த சி.பி.ஐ., பிரபாகரனின் மரணச் சான்றிதழை சிறீலங்கா அரசு இன்னும் அனுப்பவில்லை என்று கூறியது. ஆனால், மத்திய உள்துறை அமைச்சர் ப.சிதம்பரம் டில்லியில் பேட்டி அளித்த போது, பிரபாகரனின் மரணச் சான்றிதழை சிறீலங்கா அரசு அனுப்பி விட்டதாக கூறினார். இதனால் இவ்விவகாரத்தில் குழப்பம் நிலவியது. இந்நிலையில், பிரபாகரனின் மரண சான்றிதழை சிறீலங்கா அரசு அளிக்கவில்லை என்று சி.பி.ஐ. இயக்குனர் அஸ்வினி குமார் கூறியுள்ளார்.

இதுபற்றி அவர் மேலும் கூறுகையில், 'பிரபாகரனின் மரண சான்றிதழை அளிக்கும்படி சிறீலங்கா வெளியுறவு அமைச்சகத்திடம் சி.பி.ஐ. கோரியுள்ளது. விரைவில் அது கிடைக்கும் என்று எதிர்பார்க்கிறோம். ஆனால், இதுவரை எங்களுக்கு எந்த ஆவணமும் அளிக்கப்படவில்லை. சிறீலங்கா அரசு அளிக்கும் எந்தவொரு ஆவணத்தையும் நீதிமன்றில் தாக்கல் செய்வோம். அதன்பிறகு வழக்கை முடித்துக்கொள்வது பற்றி நீதிமன்றம் இறுதி முடிவு எடுக்கும். ராஜீவ் கொலை வழக்கின் ஆயுள் தண்டனை கைதி நளினியின் விடுதலை விவகாரத்தில் தமிழக அரசுதான் இறுதி முடிவு எடுக்க வேண்டும். ஒருவேளை நளினி விடுதலை செய்யப்பட்ட பிறகு, அவரது நடமாட்டத்தை கண்காணிக்கும்படி நீதிமன்றம் அறிவுறுத்தினால், அதற்கான நடவடிக்கைகளை புலனாய்வு அமைப்புகள் மேற்கொள்ளும் என்றார்.'

இதேவேளை, பிரபாகரனின் இறப்புச் சான்றிதழை இந்தியாவிடம் வழங்க பல்வேறு சட்ட நடவடிக்கைகள் இருப்பதால், அதற்கு சமமான கடிதத்தை மத்திய அரசிடம் வழங்கி விட்டதாக இந்தியாவுக்கான சிறீலங்காத் தூதர் பிரசாத் கரியவாசம் தெரிவித்துள்ளார். பிரபாகரன் மரணம் தொடர்பாக சிறீலங்கா நீதிமன்றத்தால் அத்தாட்சி செய்யப்பட்ட ஆவணத்தை மத்திய அரசிடம் வழங்கி விட்டதாக அவர் தெரிவித்துள்ளார். அவரது மரணச் சான்றிதழை வழங்குவதற்கு பல நடைமுறைகளும், கால அவகாசமும் தேவைப்படும். எனவேதான், அதற்கு சமமான நீதிமன்றத்தால் அங்கீகரிக்கப்பட்ட சட்டப்பூர்வ ஆவணத்தை இந்தியாவிடம் வழங்கி உள்ளோம் என்று பிரசாத் கரியவாசம் தெரிவித்துள்ளார். இந்த கருத்தை வெளியிட்டதன் மூலம் உள்துறை அமைச்சரை காப்பாற்ற முயற்சித்துள்ளார் பிரசாத் கரியவாசம் எனத் தெரிவிக்கப்படுகின்றது.

# ஐ.தே.க.வுக்கு ஜே.வி.பி ஆதரவு

சின்னங்கள் வெவ்வேறாக இருப்பினும், நாட்டில் நல்லாட்சியை ஏற்படுத்துவதற்காகவும் ஜனநாயகத்தை பாதுகாப்பதற்கும் ஐக்கிய தேசியக் கட்சிக்கு தொடர்ந்தும் ஆதரவு வழங்குவோம் என ஜே.வி.பி.யின் பொதுச் செயலாளர் ரில்வின் சில்வா தெரிவித்தார். ஐக்கிய தேசியக் கட்சி எதிர்வரும் நாடாளுமன்றத் தேர்தலில் `யானை` சின்னத்தில் போட்டியிடுமாயின் ஜே.வி.பி. பெரும்பாலும் தனது சின்னமான `மணி` சின்னத்திலேயே போட்டியிடும் எனவும் அவர் குறிப்பிட்டார்.

எதிர்வரும் நாடாளுமன்றத் தேர்தலில் ஜே.வி.பி.யின் நிலைப்பாடு குறித்து தெளிவுபடுத்துகையிலேயே ரில்வின் சில்வா மேற்கண்டவாறு கூறினார். அவர் தொடர்ந்து கூறுகையில், ' நடைபெறவுள்ள நாடாளுமன்றத்தில் எவ்வாறு போட்டியிடுவது என்பது குறித்து இதுவரை இறுதியான முடிவு எதுவும் எடுக்கவில்லை. சகல கட்சிகளுடனும் குறிப்பாக பிரதான எதிர்க் கட்சியான ஐ.தே.க.வுடன் பேச்சுவார்த்தைகள் முன்னெடுக்கப்படுகின்றன.

`யானை` சின்னத்தின் கீழ் ஒரு போதும் ஜே.வி.பி. போட்டியிடாது. அவ்வாறு ஐக்கிய தேசியக் கட்சி தனது சின்னத்தில் போட்டியிடுமாயின் ஜே.வி.பி. `மணி` சின்னத்திலேயே தேர்தலில் களமிறங்கும். எவ்வாறாயினும் இறுதிக் கட்ட தீர்மானங்கள் எதுவும் இதுவரை எடுக்கவில்லை. எதிர்வரும் நாடாளுமன்றத் தேர்தலில் ஐ.தே.க.வும் ஜே.வி.பி. யும் வெவ்வேறாக போட்டியிடும் நிலை ஏற்பட்டாலும் தேசிய செயற்பாடுகளில் ஓரணியாகவே செயற்படுவோம். எமது இலக்கு நாட்டில் ஜனநாயகத்தை பாதுகாத்து தற்போது காணப்படும் சர்வாதிகார ஆட்சியை முடிவிற்கு கொண்டு வருவதாகும் எனக் கூறினார்.

# புற்றுநோயால் உயிரிழப்போர் எண்ணிக்கை அதிகரிப்பு

# ஐ.நா அபாய எச்சரிக்கை

உலகம் முழுவதும் புற்றுநோயால் உயிரிழப்போரின் எண்ணிக்கை வரும் 2030ல் 1.7 கோடியைத் தாண்டும் என கணிக்கப்படுவதாக உலக சுகாதார நிறுவனம் எச்சரித்துள்ளது. இந்தாண்டில் புற்றுநோய் பலி எண்ணிக்கை சர்வதேச அளவில் 76 இலட்சத்தைத் தாண்டும் என்றும் உலக சுகாதார நிறுவன அறிக்கையில் கூறப்பட்டுள்ளது. பெப்ரவரி 4ம் திகதி உலக புற்றுநோய் தினம் கடைப்பிடிக்கப்பட்டது.



இதையொட்டி உலக சுகாதார நிறுவனத்தின் மண்டல இயக்குனர் சன் யங் சூ வெளியிட்டுள்ள அறிக்கையில், இந்த அச்சம் வெளியிடப்பட்டுள்ளது.

அந்த அறிக்கையில் கூறப்பட்டுள்ளதாவது, பால்வினை (எய்ட்ஸ்), கசநோய், மலேரியா போன்ற நோய்களை விட புற்றுநோயால் உயிரிழப்போர் எண்ணிக்கை அதிகளவில் உள்ளது. உலகில் எட்டு பேர் இறந்தால் அதில் ஒருவர் புற்றுநோயால் பலியாகும் நிலை உள்ளது. ஆனால் இந்த இறப்புகள் தவிர்க்கக் கூடியது தான் என்பது கவனிக்கத்தக்கது.

ஆண்டுதோறும் உலகம் முழுவதும் சுமார் 1.2 கோடி மக்களுக்கு புற்றுநோய் இருப்பது உறுதி செய்யப்படுகிறது. புற்றுநோய் தடுப்பு, கண்டுபிடிப்பு, சிகிச்சை போன்றவை தொடர்பான விழிப்புணர்வை மக்கள் மத்தியில் ஏற்படுத்தியாக வேண்டும். புற்றுநோய் குறித்து உலகளாவிய ஒரு பயம் இருக்கிறது. ஆனால் சரியான விழிப்புணர்வு மற்றும் தெளிவான திட்டமிடல் இருந்தால் பல புற்றுநோய்களில் இருந்து மக்கள் தப்பிக்க முடியும். புற்றுநோய்களில் 30 சதவீதத்துக்கும் மேற்பட்டவை சாதாரண நடவடிக்கைகளின் மூலமே தடுக்கக் கூடியவை தான். புகை பிடிப்பதை தவிர்த்தல், ஆரோக்கியமான உணவு, உடற்பயிற்சி, மது பழக்கத்தை கட்டுப்படுத்துதல், போதை பொருட்களை தவிர்த்தல் போன்ற அடிப்படை வி'யங்களின் மூலமே பல்வேறு புற்றுநோய்கள் வராமல் தடுத்துவிடலாம். பலவிதமான புற்றுநோய்களுக்கு புகைப் பழக்கத்தை ஒதுக்குவதே மிகப்பெரிய தனியொரு தற்காப்பு நடவடிக்கையாக கருதப்படுகிறது. அதோடு 30 நிமிட நல்ல உடற்பயிற்சிகளின் மூலம் மார்பு உள்ளிட்ட சில புற்றுநோய்களை கட்டுப்படுத்த முடியும் என கூறப்பட்டுள்ளது.



பாக முடிவு எடுக்க கூட்டம் நடைபெற்றது. அப்போது பசில் ராசபக்ச பிள்ளையானை தொடர்பு கொண்டு முடிவினை ஒத்தி போடும்படியும், தான் நேரில் சந்தித்து விளக்கம் தருவதாகவும் அதன் பின்னர் முடிவு எடுக்கும்படி அழுத்தமாக கூறியுள்ளார். இதனை தொடர்ந்து கூட்டத்தில் முடிவு எதுவும் இன்றி, தீர்மானம் இயற்றாமலே கூட்டம் முடிவுக்கு கொண்டுவரப்பட்டது.

## மீண்டும் தாவினார் சிவகீதா

நடைபெற்று முடிந்த ஜனாதிபதித் தேர்தலில் எதிர்க்கட்சிகளுக்கு ஆதரவாக செயற்பட்ட மட்டக்களப்பு மாநகர முதல்வர் சிவகீதா பிரபாகரன் எதிர்வரும் நாடாளுமன்றத் தேர்தலில் ஐக்கிய மக்கள் சுதந்திர முன்னணிக்கு ஆதரவாக செயற்படத் தீர்மானித்துள்ளார். எதிர்வரும் நாடாளுமன்றத் தேர்தல் குறித்து கருத்து தெரிவித்த அவர், ?ஜனாதிபதித் தேர்தலின்போது ஜெனரல் சரத் பொன்சேகாவை ஆதரித்தேன். எனினும் ஐக்கிய தேசிய முன்னணியுடன் இணையவில்லை. இன்னும் நான் சிறீலங்கா சுதந்திரக் கட்சியின் உறுப்பினராகவே இருந்து வருகிறேன். அந்தக் கட்சிக்கு ஆதரவு வழங்குவதே பொருத்தமானது என நினைக்கிறேன். எனினும் எனது நிலைப்பாடு தொடர்பாக கட்சியின் உயர்மட்ட தீர்மானங்களை கருத்திற்கொள்ள வேண்டியதும் அவசியமாகும்' என்றார்.

## 27 இந்து ஆலயங்களை அழிக்க முடிவு

யாழ்.காங்கேசன்துறை வீதியை விஸ்தரிக்கும் போது 27 இந்து ஆலயங்களும், பழம்பெரும் கலாசாரச் சின்னங்களும் பாதிக்கப்படும் அல்லது அழிக்கப்படும் நிலை ஏற்பட்டிருக்கிறது. இதனால் யாழ்.இந்து மக்களும் இந்து நிறுவனங்களைச் சேர்ந்தோரும் அதிர்ச்சியடைந்துள்ளனர். இந்த விடயம் குறித்து யாழ்ப்பாணத்தில் உள்ள நிபுணர்களுடன் ஆராய்ந்து மாற்று ஏற்பாடு செய்யவேண்டும் என அகில இலங்கை இந்து மாமன்றம் கோரிக்கை விடுத்துள்ளது. வடக்கு மாகாண சிறீலங்கா ஆளுநர் ஜி.ஏ.சந்திர சிறியை கொழும்பில் சந்தித்த இந்துமாமன்றத்தின் தூதுக்குழுவினர் மேற்கண்ட கோரிக்கையை வலியுறுத்தினர். சகல தரப்புகளுடனும் கலந்துரையாடிய பின்னரே தீர்க்கமான முடிவு எடுக்கப்படும் என மேஜர் ஜெனரல் ஜி.ஏ.சந்திரசிறி பதலளித்துள்ளார்.

## யாழ்ப்பாணத்தில் இளைஞனை காணவில்லை

யாழ்ப்பாணம் ஏழாலை பகுதியை சேர்ந்த பாடசாலை மாணவரொருவர் கடந்த 10 நாட்களாக காணவில்லை என சுன்னாகம் காவல் நிலையத்தில் பெற்றோர் முறையிட்டுள்ளனர். கொக்குவில் இந்துக் கல்லூரியில் தரம் 11 இல் கல்வி பயிலும் புவனேந்திரன் புவிதரன் (16) என்ற மாணவன் கடந்த 27ம் திகதி புதன்கிழமை மாலை வீட்டிலிருந்து வெளியே புறப்பட்டுச் சென்று இதுவரை வீடு திரும்பவில்லை என பெற்றோர் தெரிவித்துள்ளனர். இவர் வீடு திரும்பாததையடுத்து உறவினர்கள் மற்றும் நண்பர்கள் வீடுகளில் தேடிய போதும் எதுவித தகவலும் கிடைக்கவில்லை எனவும் பெற்றோர் தெரிவிக்கின்றனர்.

## கிளிநொச்சியில் இரண்டு தமிழ் பெண்கள் படுகொலை

சிறீலங்கா அரசு தமிழ் மக்களை மீள்குடியேற்றம் என்ற பெயரில் வன்னியில் குடியமர்த்தியுள்ள நிலையில் அங்கு மர்மக்கொலைகள் நடந்தேறி வருகின்றன. இந்நிலையில் மீண்டும் வன்னியில் குடியேறி வரும் மக்களை வரவேண்டாம் என்று, அங்கு குடியமர்ந்து சிங்களப் படையினரின் கொடுமைகளை அனுபவிக்கும் மக்கள் தெரிவித்துள்ளார்கள்.

கடந்த 7ம் திகதி, கிளிநொச்சியின் கணேசபுரம் பகுதியில் இரண்டு பெண்கள் படுகொலை செய்யப்பட்டு கிணற்றில் வீசப்பட்டுள்ள நிலையில் கண்டெடுக்கப்பட்டுள்ளார்கள். இவர்களது உடலங்களை மக்கள் இனம்காட்டியுள்ளதுடன், உடலங்களை சிறீலங்கா காவல்துறையினர் எடுத்துசென்றுள்ளதாகவும் தெரிவிக்கப்பட்டுள்ளது. இளம் பெண்கள் இருவர் படுகொலை செய்யபட்டு கிணற்றில் வீசப்பட்டதை தொடர்ந்து கிளிநொச்சியில் உள்ள மக்கள் மத்தியில் அச்சம் அதிகரித்துள்ளது. இந்நிலையில் படுகொலை செய்யப்பட்ட பெண்கள் யார் என இனம்காண முடியாது உள்ளதாகவும் மக்கள் தெரிவித்துள்ளார்கள். ஏற்கனவே இளைஞர்கள் சிலர் கிணற்றில் இருந்து சடலங்களாக மீட்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

## சிறீலங்கா நாடாளுமன்றத்துக்கு தேர்தல்

சிறீலங்கா நாடாளுமன்றத்தின் ஆயுள் காலம் முடிவதற்கு 2 மாதத்துக்கு முன்னதாகவே, திடீரென நாடாளுமன்றத்தை கலைத்துள்ளார் மகிந்த ராஜபக்ச. இதைத் தொடர்ந்து ஏப்ரல் மாதம் 8ம் திகதி நாடாளுமன்றத்துக்கு தேர்தல் நடைபெறும் என்று சிறீலங்கா தேர்தல் ஆணையகம் அறிவித்தது. வேட்பாளர்கள் மனு தாக்கல் செய்வதற்கான திகதி வருகிற 19ம் திகதி என்றும், தேர்தல் முடிந்து நாடாளுமன்றம் ஏப்ரல் மாதம் 22ம் திகதி கூடும் என்றும் அறிவிக்கப்பட்டுள்ளது.



# நரசிம்மன் பதில்கள்

உங்கள் கேள்விகளை கேட்பதற்கு

narasimmanpathilkal@gmail.com

சரத்பொன்சேகா கைது செய்யப்பட்டுள்ளாரே?

**எம்.கேதீஸ் – லண்டன்**

எதிர்பார்த்ததுதான். ஆனால் சற்று தாமதமாகியுள்ளது. சிறீலங்காவில் இடம் பெற்ற ஜனாதிபதித் தேர்தலில் சரத் வெற்றிபெற்றிருந்தால் அன்றே வன்முறையைத் தூண்டினார் என கைது செய்யப்பட்டிருப்பார். இனிமேல் அவர் வெளியே வராதவாறு இராணுவ நீதிமன்றத்தில் தீர்ப்பு வழங்கப்படலாம். இவரது கைது குறித்து ஐ.நா செயலர் பான் கீ முன் இந்தக் கைதுக்கு கண்டனம் தெரிவிக்காமல், இதற்காக வன்முறையில் ஈடுபடவேண்டாம் எனத் தெரிவித்திருப்பது, இக்கைதை அவர் ஏற்பதுபோல் உள்ளது.

மக்கள் பேரவைத் தேர்தலும், நாடுகடந்த அரசு தேர்தலும் ஒரே நாளில் ஒரே இடத்தில் நடத்தப்படும் என உருத்திரகுமாரன் அறிவித்துள்ளாரே? இரண்டு தேர்தல்களை ஒன்றாக நடத்த முடியுமா?

**பீ.சிவதாஸ் –பிரான்ஸ்**

தேர்தல் குறித்த சரியான விளக்கம் இல்லாமல் எப்படி தேர்தல் நடத்த முடியும். மக்கள் எப்படி வாக்களிப்பார்கள்.?

சரத் பொன்சேகா கைது செய்யப்பட்டபோது ரணில் இந்தியாவில் இருந்துள்ளாரே? சரத்தின் கைது குறித்து முன்னரே ரணிலுக்கு தெரியுமா?



## சரத் பொன்சேகா கைது செய்யப் பட்டுள்ளாரே?

**ஆர்.வரதன் – இலண்டன்**

ரணிலுக்கு தெரியுமோ இல்லையோ, ஆனால் இந்தியாவிற்கு தெரியாமல் இருந்திருக்காது. இதற்காகத் தான் ரணிலை இந்தியா அழைத்தது போலும்.

தமிழ்க் கூட்டமைப்பு மகிந்த ராஜபக்சவுடன் தேர்தல் கூட்டுக்கு வரும் என செய்திகள் வெளியாகி உள்ளது. இது சாத்தியப்படுமா?

**எஸ்.சந்திரன் –பிரான்ஸ்**

இது சாத்தியப்படலாம். ஆனால் தமிழ் மக்களிற்கு வரலாற்றில் இல்லாத அழிவைத்தந்த மகிந்தவுடன் கூட்டுச்சேர்ந்து போட்டியிட்டால் அதற்குரிய பதிலை மக்கள் தங்கள் வாக்குகளால் வழங்குவார்கள்.

முன்னரை விட கடந்த ஜனாதிபதித் தேர்தலில் யாழில் மகிந்தவுக்கு அதிக வாக்கு கிடைத்துள்ளதே?

**டி.அன்ரனி – பிரான்ஸ்**

தேர்தல் நடப்பதற்கு பல மாதங்களுக்கு முன்னரே யாழில் டக்ளஸ் முகாமிட்டிருந்தார். அவர் தன்னால் ஆன சகல வழிகளிலும் முயற்சித்தும் மகிந்தவிற்கு யாழில் வெற்றிவாய்ப்பை ஏற்படுத்த முடியவில்லை. அதனால் அவர்களிடம் வாங்கிக் கட்டிக்கொண்டது தான் மிச்சம். அதோடு, மகிந்தவிற்கு ஏற்பட்ட தோல்வியின் எதிரொலியாக யாழில் மர்ம கொலைகள், கைதுகள் அதிகரித்துள்ளதும் இங்கு கவனிக்கத் தக்கது.

தமிழ்நாட்டில் அதிமுக - கொங்கிரஸ் கூட்டணி ஏற்படும் என தமிழக செய்திகள் தெரிவிக்கின்றனவே?

**கே.ரகு – இலண்டன்**

இது நடக்காது என்று கூறமுடியாது. அண்மையில் முன்னாள் அமைச்சரும் கொங்கிரஸ் முக்கியஸ்தருமான இளங்கோவன் தமிழ்நாட்டில் சட்டம் ஒழுங்கு சீர்குலைந்துள்ளதாக தெரிவித்ததும், டில்லியில் ஜெயலலிதா - சோனியா சந்திப்பும் இதற்கு சான்றாக அரசியல் நோக்கர்களால் கூறப்படுகின்றது.

போர் முடிந்து விட்டது என சொல்லும் சிறீலங்கா ரஷ்யாவில் (முன்னூறு கோடி) ஆயுத கொள்முதலில் ஈடுபட்டுள்ளதே?

**வீ.சாந்தன் – இலண்டன்**

போர் ஓய்ந்து விட்டதாக கூறும் சிறீலங்கா அரசு தனது போர்க்குற்றங்கள் தொடர்பான ஐ.நாவின் விசாரணையை எதிர்ப்பதற்கு வாக்கு மேலாண்மை உள்ள ரஷ்யாவுடன் தனது நட்பை மேம்படுத்தவே இப் புதிய உடன்படிக்கையில் ஈடுபட்டுள்ளது.

சரத்தின் கைதை கண்டித்து கொழும்பில் நடந்த ஆர்ப்பாட்டம் அடிதடியில் முடிந்துள்ளதே?

**கே.ராசலிங்கம் – இலண்டன்**

சரத்தின் கைதை கண்டித்து நடந்த ஆர்ப்பாட்டம் சிறீலங்கா அரசின் திட்டமிடலிலேயே அசம்பவிதத்தில் முடிவடைந்தது. இனிமேல் இப்படியான போராட்டங்கள் முன்னெடுக்கப்படுவதை தடுப்பதற்கும், சரத் மீது மேற்கொள்ளப்படும் சட்ட நடவடிக்கைகள் குறித்து எந்த அசம்பவிதங்களும் இடம்பெறாமல் தடுப்பதற்குமே.

யாழில் உள்ள பத்திரிகையாளர் மீது கொலை அச்சுறுத்தல் விடப்பட்டுள்ளதே? தமிழ் செய்தியாளர்களின் நிலை இது தானா?

**கே.மாதவன் – பிரான்ஸ்**

மாமனிதர் சிவராமும் இப்படியான பல கொலை அச்சுறுத்தல்களுக்கு முகம் கொடுத்து பின் அவர் கொலை செய்யப்பட்டார். கொழும்பில் கொலை செய்யப்பட்ட லசந்த விக்கிரமதுங்காவின் கொலைக்கு சரத் பொன்சேகா காரணம் என சொல்லப்படுகிறது. சரத் பொன்சேகா காரணமென்றால் ஏன் உடனேயே அவர் மீது நடவடிக்கை எடுக்கப்படவில்லை. யாழ் பத்திரிகையாளர் மீது கொலை அச்சுறுத்தல் விட்டவர்கள் தமிழர்கள் என்பதுதான் உறுத்துகிறது.

# இராஜதந்திர முச்சந்தியில் தீமூட்டியவன்

இராஜதந்திர முச்சந்தியில் அவன்
தீமூட்டி எரிந்த பொழுதில் பெரிதாக
எதுவும் நடந்துவிடவில்லை.
எரிந்து கருகிய அவனின் உடல் கடந்தே
உலகசமாதானம் தன் நுனிநாக்கு உச்சரிப்புகளை
சொல்லி சப்புக்கொட்டி நின்றது.
தாய்நிலம் மீதான தணியாத தாகமும்
பக்கத்து மனிதன் மீதான பற்றுதலால்
அவன் பெருநெருப்பை மூட்டி
அவிந்தபொழுதினில்
நாகரீகபெருமான்கள் அவமானத் தீக்கோழிகளாய்
ஜெனீவா மன்றத்துள் முகம் புதைத்து நின்றனர்.
புதுமாத்தளன் கடந்து
இன அழிப்பு தொடர்கையில்
எரிந்தபடி முருகதாசன்
நிறுத்தவேண்டும் உலகம் இதை என்றான்.
ஒருகால் முறிந்த கதிரை மட்டுமே அவனின்
சுயதகனம் பார்த்து விக்கித்து நின்றது – மற்றப்படி
அவனின் எரிந்த உடல் கடந்தே எல்லோரும்
தம்தம் அலுவல்களுக்காய் பறந்தனர் – எல்லோருக்கும்
உலக நாகரீகம் மீட்பதிலும்
கரை ஒதுங்கும் மீன் இனம் காப்பதிலும்,
அன்டார்ட்டிக்காவில் பனி கரைவதிலும்,
ஈரானின் அணு உலையை
மூடும் மும்முரத்திலுமே நேரம் ஓடியது
முருகதாசன் உடல்கருகி
ஓரத்தில் கிடந்தான்.
எம்மைத்தவிர வேறு எவரையுமே அந்த
இளைஞனின் ஆகுதி உலுக்கியதாய்
தெரியவில்லை. இன்றும் கூட..!
நாமும் என்ன செய்தோம் – கூடினோம்.
ஆர்ப்பரித்தோம். திரண்டோம்.
ஒன்றுகூடி அவன் உடலை எரித்து இப்போ
ஒன்றும் நடவாதது போலவே நடக்கிறோம்.
என் தந்தை தாய்.. உன் சகோதரர், உற்றார் என
அனைவருக்குமாக எரிந்தவன் முருகதாசன்.
ஏதோ ஒரு அலுவலகத்தில் எஞ்சிய நாட்களை
வேலைசெய்து குடும்பம் குட்டி என
வாழ்ந்துவிட்டுப் போயிருக்கலாம் அவனும்.
ஆயினும் உலகத்து ஊர் கூடிநின்று எம்
தாய்நிலம் எரித்து எம் தேசத்து பூக்களை
தணலாக்கி வெறியாட்டம் போட்ட
பொழுதினில் தன் உடல்கொழுத்தி அதனுள்
உலகத்து மனச்சாட்சியை உலுக்க முயன்றவன்.
ஆனந்தபுரத்திலிருந்தும் அடுத்த முனையில்
சாளையிலிருந்தும், இன்னொரு தரப்பில்
இரணைப்பாலையில் இருந்தும்
நந்திக்கடலிருந்தும் மெதுமெதுவாய்
ஒருகூட்டுப் படுகொலைக்கு உலகம் தயாரான
பொழுதினில் அதைத்தடுக்க கடிதம் எழுதி
வைத்துவிட்டு உடல்கருகிப்போன ஒருவனை
எந்த நாதியும் ஏன் என்று திரும்பிப்பார்க்கவில்லை.
ஆனாலும் நாம் அப்படியே விட்டுவிட்டு
அடுத்தவேலைக்காக பறக்கமுடியாது.
எங்களுக்காய் எரிந்தவனுக்கு என்னென்று
நன்றி நினைவுகூர்வோம் – அவனின் உடல் எரிந்த
சாம்பலை ஊதிவிட்டு அடுத்தவருடம் அவன்
நினைவுவரும் வரைக்கும் ஓய்ந்திருக்கப்போகிறோமா?
அந்த இளைஞனின் நினைவை எம்
நெஞ்சுள் பதிவோம் – எம் அடுத்த
தலைமுறைக்கும் சொல்லிவைப்போம்.
முருகதாசன்.
உன்னை எழுதவும் பாடவும் எமக்கிருக்கும்
வார்த்தைகளில் எதுவுமேயில்லை.
உன்னை வணங்குகிறோம் – நீ
எரிந்தபொழுதினில் எம் நெஞ்சில்பட்ட
சுடுதழும்பை ஆறவிடாமல் வன்மம் வளர்ப்போம்.
காலம் எவ்வளவு கடந்தாலும் அனலாடிய உன்
ஆன்மத்தை, அதனிலும் உயர்ந்த உன் ஈகத்தை
எம்முள் நிரந்தரமாய் படிந்துவிட்ட காயத்தை
எதையுமே நாம் மறவோம்.
நீ நினைத்த விடுதலையை
நாளைப்பொழுது மீட்டுவரும்.
நம்பிக்கையோடு இரு.

**– ச.ச.முத்து**



# சிறீலங்காப் பொருட்கள் புறக்கணிப்பு




அமெரிக்காவில்

சிறீலங்காவில் இருந்து இறக்குமதியாகும் பொருட்களைப் புறக்கணிக்குமாறு அமெரிக்கா மற்றும் பிரான்சில் கடந்த வாரம் இடம்பெற்ற போராட்டங்களில் இருந்து.




பிரான்சில்

## ஊடக சுதந்திரம் வேண்டி ஆர்ப்பாட்டம்!




ஜனாதிபதித் தேர்தலுக்குப் பின்னர் ஊடகங்களுக்கு எதிராகக் கட்டவிழ்த்து விடப்பட்டுள்ள ஒடுக்குமுறைக்கு எதிர்ப்புத் தெரிவித்தும், தடுத்து வைக்கப்பட்டுள்ள பத்திரிகையாளர்களை விடுதலை செய்யக் கோரியும் கொழும்பில் கடந்த 8ம் திகதி திங்கட்கிழமை நூறுக்கும் மேற்பட்ட ஊடகவியலாளர்கள் ஆர்ப்பாட்டமொன்றை மேற்கொண்டனர். ஊடகவியலாளர் தொழிற்சங்கக் கூட்டமைப்பு, ஊடக ஒடுக்கு முறைக்கு எதிரான அமைப்பு உட்பட ஊடக அமைப்புகள் பலவும் இணைந்து ஏற்பாடு செய்திருந்த இந்த ஆர்பாட்டம் கொழும்பு புறக்கோட்டை தொடருந்து நிலையத்திற்கு முன்பாக இடம்பெற்றது. இதில் கலந்துகொண்ட ஊடகவியலாளர்கள், தாங்கள் தடையின்றி, அச்சமின்றி செயற்பட அனுமதிக்குமாறு அரசைக் கோரினர். மேலும் தடுத்து வைக்கப்பட்டுள்ள 'லங்கா' செய்தித்தாளின் ஆசிரியர் சந்தன சிறிமல்வத்தையை விடுதலை செய்யுமாறும், காணாமற்போன செய்தியாளரைத் தேடிக்கண்டுபிடிக்குமாறும் அவர்கள் கோரினர். ஜனாதிபதி மகிந்த ராஜபக்ச அரசை விமர்சித்த பத்திரிகையாளர்களையும் ஊடக அமைப்புகளையும் அரசு ஒடுக்க முனைவதாக ஆர்ப்பாட்டத்தில் கலந்து கொண்ட ஊடக சுதந்திர ஆர்வலர்கள் குற்றம் சாட்டினர். கடந்த இரண்டுவார காலமாக இலங்கையின் ஊடகங்கள் மிக மோசமான ஆபத்தை எதிர்கொண்டுள்ளன என்றும் அவர்கள் குறிப்பிட்டனர்.

# மறக்க முடியுமா..?







ஒருமுறை தட்டினாலே துள்ளி எழுந்து கட்டியணைத்து முத்தம் தருவாரே என் அப்பா!
இத்தனை முறை தட்டியும் எழும்பவே மாட்டேன் என்கிறாரே என் அப்பா.
ஏனென்று புரியவில்லையே....?
சிறீலங்காவின் இனப்படுகொலைத் தாக்குதலில் சிக்குண்டு கடந்த 12.02.2009 அன்று எறிகணைத் தாக்குதலில் சாவைத் தழுவிக்கொண்ட ஊடகவியலாளர் பு.சத்தியமூர்த்தி, அருகில் அவரது ஒரேயொரு மகள்.



## இந்தியா – அமெரிக்கா
### அணு ஒப்பந்தம் அமுலுக்கு வந்தது

இந்தியா - அமெரிக்கா் இடையிலான அணு ஒப்பந்தம் முழுமையாக அமுலுக்கு வந்துள்ளது. இதையடுத்து, இந்தியாவுக்கு அமெரிக்க நிறுவனங்கள் யுரேனியம் வழங்குவதற்கு வழிகிடைத்துள்ளது. 2008ம் ஆண்டில் இந்திய அரசியலில் பெரும் சர்ச்சையை ஏற்படுத்திய அணு ஒப்பந்தத்தில் பிரதமர் மன்மோகன்சிங்கும். அப்போதைய அமெரிக்க அதிபர் ஜோர்ஜ் புஷ்சும் கையெழுத்திட்டனர். ஒப்பந்தப்படி இந்திய அணு உலைகளுக்கு தேவையான யுரேனியத்தை அமெரிக்கா வழங்க வேண்டும். இந்தியாவுடனான அணு வர்த்தகத்துக்கு சர்வதேச அளவில் விதிக்கப்பட்டு இருந்த 30 ஆண்டு கால தடை நீக்கப்பட்டது. இதையடுத்து இந்திய அணுமின் உலைகளை சர்வதேச ஆய்வுக்கு உட்படுத்துவதற்கான பாதுகாப்பு விதிமுறைகள் பற்றி சர்வதேச அணு சக்தி முகமையான ஐ.ஏ.இ.ஏ.வுடன் இந்தியா உடன்பாடு செய்து கொண்டது.

அமெரிக்க அதிபராக ஒபாமா பதவி ஏற்றதைத் தொடர்ந்து இந்த ஒப்பந்தம் அமுலாக்கப்படுமா? என்ற சந்தேகம் எழுந்தது. கடந்த நவம்பரில் அமெரிக்கா சென்றிருந்த பிரதமர் மன்மோகன் சிங், ஒபாமாவை வெள்ளை மாளிகையில் சந்தித்துப் பேசினார். அப்போது அணு ஒப்பந்தம் முழுமையாக அமுல்படுத்தப்படும் என்று ஒபாமா உறுதி அளித்தார்.

இந்நிலையில், இந்தியாவுடனான அணு ஒப்பந்தத்தை அமுல்படுத்துமாறு அமெரிக்க வெளியுறவு அமைச்சர் ஹிலாரி கிளிண்டனுக்கு ஒபாமா கடந்த வாரம் உத்தரவிட்டார். இதன்படி, சர்வதேச அணுசக்தி முகமையுடன் இந்தியா செய்து கொண்ட பாதுகாப்பு உடன்பாட்டுக்கும், அமெரிக்க நிறுவனங்கள் இந்தியாவுடன் அணு தொழில்நுட்ப வர்த்தகம் செய்து கொள்ளவும் ஒபாமா பச்சைக் கொடி காட்டியிருக்கிறார். ஒப்பந்தப்படி மின் உற்பத்திக்கு பயன்படும் இந்திய அணு உலைகள் தனியாக பிரிக்கப்பட்டு சர்வதேச ஆய்வுக்கு உட்படுத்தப்பட வேண்டும். இதற்காக இந்தியா செய்துள்ள ஏற்பாடுகளையும் அமெரிக்கா அங்கீகரித்துள்ளது.

## அமைதி பேச்சு விவரம் பாகிஸ்தானிடம் இந்தியா நிபந்தனை

வெளியுறவு செயலாளர்கள் நிலையில் நடக்க இருக்கும் பேச்சு வார்த்தையில் தீவிரவாதம் மற்றும் இரு தரப்புக்கு இடையே காயப்படுத்தும் கசப்பான பிரச்னைகள் பற்றி மட்டுமே பேசப்படும் என்று பாகிஸ்தானிடம் இந்தியா திட்டவட்டமாக தெரிவித்துள்ளது மும்பையில் பாகிஸ்தான் தீவிரவாதிகள் நடத்திய தாக்குதலுக்கு பிறகு பாகிஸ்தானுடன் நடத்தி வந்த அமைதி பேச்சுவார்த்தையை இந்தியா அடியோடு நிறுத்தி விட்டது. பேச்சுவார்த்தையை மீண்டும் தொடங்க வேண்டும் என்று பாகிஸ்தான் வற்புறுத்தி வந்தது. அதைத் தொடர்ந்து வெளியுறவு செயலாளர்கள் நிலையில் பேச்சுவார்த்தை நடத்த இந்தியா முன்வந்தது. இதை பாகிஸ்தான் வெளியறவு செயலாளர் சல்மான் பஷீரிடம் இந்திய வெளியுறவு செயலாளார் நிருபமா ராவ் தெரிவித்தார். தீவிரவாதம் மற்றும் காயப்படுத்தக் கூடிய கசப்பான பிரச்னைகள் பற்றி மட்டுமே பேசப்படும் என்று பஷீரிடம் நிருபமா தெரிவித்துள்ளார்.

அதே சமயம் முழு அளவிலான அமைதி பேச்சு எப்போது தொடங்கும் என்பதை நிருபமா கூறவில்லை. இது தொடர்பாக சல்மான் பஷீர் டில்லியில் உள்ள பாகிஸ்தான் தூதர் சாகித் மாலிக்குடன் தொடர்பு கொண்டு, நிருபமாவை சந்தித்து பேச்சுவார்த்தையில் என்னென்ன பிரச்னைகள் பற்றி விவாதிக்கப்படும் என்பதை விளக்கமாக கேட்டு சொல்லும்படி கூறியுள்ளார்.

## சீனாவினால் இந்தியக் கடற்படையை தாக்க முடியாது
### இந்திய கடற்படை தலைமை தளபதி வர்மா

சீனாவின் கப்பல் எதிர்ப்பு ஏவுகணைகளால் இந்திய போர் கப்பல்களுக்கு ஆபத்து இல்லை என்று கடற்படை தலைமை தளபதி வர்மா கூறினார். விமானம் தாங்கி கப்பல்கள் குறித்து டில்லியில் நடந்த கருத்தரங்கில் இந்திய கடற்படை தலைமை தளபதி வர்மா கலந்து கொண்டார். பின்னர் அவர் நிருபர்களிடம் கூறியதாவது: சீன கடற்படை கப்பல் எதிர்ப்பு ஏவுகணைகளை குவித்துள்ளது. கடலில் ஆயிரக்கணக்கான கப்பல்கள் இருக்கும். அதில் குறிப்பிட்ட ஒரு கப்பலை குறிபார்த்து ஏவுகணை மூலம் தாக்குவது இயலாத ஒன்று. எனவே சீன கப்பல் எதிர்ப்பு ஏவுகணைகளால் இந்திய போர் கப்பல்களுக்கு ஆபத்து இல்லை. விமானம் தாங்கி கப்பல்களின் விலை மிகவும் அதிகம். மேலும், அதன் பிரம்மாண்ட அளவு காரணமாக போர் காலத்தில் அவற்றை காப்பதும் கடினம். அதே நேரத்தில் நிலத்தில் இருந்து ஏவுகணை ஏவி அழிப்பது கடினம். விமானம் தாங்கி கப்பல்கள் ஒரு நாளைக்கு 600 கடல் மைல் தூரம் செல்லக்கூடியவை. இந்த கப்பல்களை 10 இலட்சம் சதுர கடல்மைல் பரப்பளவில் தேடி கண்டுபிடித்து ஏவுகணை மூலம் அழிப்பது இயலாத காரியம். செயற்கைகோள், விமானங்கள் உதவியுடன் கண்காணித்தால் கூட ஏவுகணை மூலம் விமானம் தாங்கி கப்பலை அழிக்க முடியாது. இந்திய கடற்படையிடம் தற்போது 16 நீர் மூழ்கி கப்பல்கள் உள்ளன. இது வரும் ஆண்டுகளில் மேலும் குறையும் என்றார்.

# மரபணு கத்தரிக்காய்க்கு தடை

உயிரி தொழில்நுட்பம் (வயோ ரெக்னாலஜி) அடிப்படையில் மரபணு மாற்றம் செய்யப்பட்ட புதிய உணவு பயிர்கள், உலகின் பல்வேறு பகுதிகளில் அறிமுகப்படுத்தப்பட்டு வருகின்றன. இந்த மரபணு மாற்றம் செய்யப்பட்ட பொருட்களால் எதிர்காலத்தில் புற்றுநோய் போன்ற பல வியாதிகள் ஏற்படும் வாய்ப்புக்கள் இருப்பதாக கூறப்படுகின்றது. இந்நிலையில், மரபணு மாற்றம் செய்யப்பட்ட கத்தரிக்காயை இந்தியாவில் பயிரிடுவது பற்றி ஆய்வு செய்வதற்காக நிபுணர் குழு அமைக்கப்பட்டு இருந்தது. இந்த குழு, கடந்த ஒக்டோபர் மாதம் தனது அறிக்கையை மத்திய அரசிடம் தாக்கல் செய்தது. மரபணுக் கத்தரிக்காய், இந்தியாவின் சுற்றுச் சூழலுக்கு உகந்தது என்றும் தெரிவித்தது.



இந்நிலையில் இந்த முடிவிற்கு கடும் எதிர்ப்புக் கிளம்பியது. மரபணு உற்பத்திகள் விசத்தன்மை கொண்டவை என்றும், இதன்மூலம் நமது பாரம்பரிய காய்கறிகளும் நாளடைவில் அழிந்துவிடும் இந்த கத்தரிக்காயை சாப்பிட்டால் புற்றுநோய் ஏற்படும் அபாயம் உள்ளது என்றும் எதிர்ப்பாளர்கள் கூறினார்கள்.

அதைத் தொடர்ந்து, இந்த விவகாரத்தில் அவசரப்பட்டு மத்திய அரசு எந்த முடிவையும் எடுக்காது என்று, மத்திய சுற்றுச்சூழல் துறை அமைச்சர் ஜெய்ராம் ரமேஷ் உறுதி அளித்து இருந்தார். நாடு முழுவதிலும் உள்ள 7 முக்கிய நகரங்களில் இது தொடர்பாக நடைபெற்ற ஆலோசனை கூட்டத்தில் அமைச்சர் ஜெய்ராம் ரமேஷ் கலந்து கொண்டு, அனைத்து தரப்பினரின் கருத்துக்களையும் கேட்டு அறிந்தார். இந்த கூட்டங்களில் மரபணுக் கத்தரிக்காய்க்கு கடும் எதிர்ப்பு தெரிவிக்கப்பட்டது. 11 மாநில அரசுகள் தங்கள் எதிர்ப்பை தெரிவித்து இருந்தன. 9 மாநிலங்களில் இக் கத்தரிக்காய்க்கு தடை விதிக்கப்பட்டுள்ளது. இந்நிலையில், மரபணு கத்தரிக்காயை வர்த்தக ரீதியாக பயிரிடுவதற்கு அனுமதி இல்லை என்று, மத்திய அமைச்சர் ஜெய்ராம் ரமேஷ் அறிவித்தார்.

இதுதொடர்பாக அவர் அளித்த பேட்டியின்போது, மரபணுக் கத்தரிக்காய்க்கு அனுமதி வழங்குவதில், விஞ்ஞானிகள், விவசாயிகள் மற்றும் சம்பந்தப்பட்ட துறையினர் இடையே தெளிவான ஒருமித்த கருத்து எட்டப்படவில்லை. இந்த பிரச்சினையில் மேலும் ஆய்வுகள் நடத்தப்பட வேண்டும். எனவே இதில் அளவுக்கு அதிகமான அவசரம் காட்ட வேண்டிய அவசியம் இல்லை. மக்களின் மன உணர்வுகள் எதிராக இருக்கும் நிலையில், முன் எச்சரிக்கையுடன், மிகவும் கவனமாக, கொள்கை அடிப்படையிலான அணுகுமுறையை கடைப்பிடிக்க வேண்டியது எனது கடமையாகும். மனிதர்களின் ஆரோக்கியத்தை கருத்தில் கொண்டு, இதுபோன்ற பயிர்கள் பாதுகாப்புக்கு உகந்ததுதானா என்று சுதந்திரமான விஞ்ஞான ஆய்வுகள் மூலம் நிரூபிக்கப்படும் வரை, எந்த ஒரு முடிவையும் அமல்படுத்த மாட்டோம் என்றார்.

## காஷ்மீரில் பனிச்சரிவில் சிக்கி 17 இந்திய இராணுவத்தினர் பலி, ஆப்கானில் 157 பேர் பலி

காஷ்மீரில் இராணுவத்தினர் முகாமிட்டு இருந்த பகுதியில் கடுமையான நிலச்சரிவு ஏற்பட்டதால் பனிக்கட்டிகளுக்குள் இராணுவத்தினர் அகப்பட்டு 17 பேர் பலியாகினர். மேலும், 17 பேருடைய நிலைமை கவலைக்கிடமாக உள்ளது. காஷ்மீர் மாநிலத்தில் கடந்த சில நாட்களாகவே கடுமையான பனிப்பொழிவு நிலவுகிறது. காஷ்மீரையும் ஜம்முவையும் இணைக்கும் சிறீநகர் - ஜம்மு தேசிய நெடுஞ்சாலையில் போக்குவரத்து பாதிக்கப்பட்டுள்ளது. மேலும், பனிப்பொழிவு குறித்த எச்சரிக்கையும் விடுக்கப்பட்டது.

வடக்கு காஷ்மீரில் பனிமலை பகுதிகளில் இந்திய இராணுவத்தின் பயிற்சி முகாம்கள் அமைந்துள்ளன. பல்வேறு இடங்களில் கூடாரம் அமைக்கப்பட்டு பயிற்சி அளிக்கப்படுகிறது. போர்ப்படை பயிற்சி முகாம்களும் அந்த பகுதிகளில் அமைந்துள்ளன.



கடல் மட்டத்தில் இருந்து 10 ஆயிரம் அடி உயரத்தில் குல்மார்க் மலையுச்சியில் உள்ள கிலன்மார்க் என்ற பகுதியில் குஜர்கட் என்ற இடத்தில் ஒரு முகாம் இருக்கிறது. அந்த முகாமில் சுமார் 350 இராணுவத்தினர் தங்கி இருந்தனர். இந்த சூழ்நிலையில், கடந்த திங்களன்று காலை 8 மணி அளவில் கடுமையான பனிச்சரிவு ஏற்பட்டது. மலை உச்சியில் இருந்து பல தொன் எடையுள்ள பனிப்பாறைகள் உருண்டு வந்து, 60 இராணுவத்தினர் தங்கி இருந்த ஒரு கூடாரத்தின் மீது விழுந்தன. அவர்கள் பயிற்சிக்கு தயாரான போது இந்த துயரம் நடந்தது. அருகிலிருந்த முகாம்களில் இருந்து வந்து உடனடி மீட்புப்பணி இடம்பெற்றபோதும், லெப்டினன்ட் தர அதிகாரி உட்பட 17 இராணுவத்தினர் உயிரிழந்தனர். மேலும், படுகாயங்களுடன் 17 பேர் மீட்கப்பட்டனர். 26 பேர் காயங்களின்றி உயிருடன் மீட்கப்பட்டனர்.

இதேவேளை, ஆப்கானிஸ்தானில் கடந்த சில நாட்களாக பனிப்பொழிவு ஏற்பட்டது. ஆப்கானிஸ்தானின் இந்துகுஷ் மலையில் தொடர்ச்சியாக ஏற்பட்ட பனிச்சரிவில் 157 பேர் பலியானார்கள். சாலாங் கணவாய் பகுதியில் இறந்து கிடந்த 157 உடல்கள் மீட்கப்பட்டன. இந்த தகவலை அந்நாட்டின் உள்துறை அமைச்சரக செய்தி தொடர்பாளர் செமெரி பாஷாரி தெரிவித்தார். பனிச்சரிவில் சிக்கிய 2600 பேர் காப்பாற்றப்பட்டனர். 12 ஆயிரத்து 700 அடி உயரத்தில் உள்ள சாலை பனிச்சரிவு காரணமாக மூடப்பட்டது. இதனால் அந்த சாலையில் நூற்றுக்கணக்கான வாகனங்கள் நின்று இருக்கின்றன. நின்று போன வாகனங்களில் இருந்தவர்கள் குளிரில் விரைத்து வாகனங்களில் இருந்த நிலையிலேயே பிணமானார்கள். பனிச்சரிவில் சிக்கியவர்களை மீட்கும் பணியில் 400 காவல்துறையினர் மற்றும் 100 தன்னார்வ தொண்டர்கள் பயன்படுத்தப்பட்டனர் என்றும் தெரிவித்தார்.




"என்றும் பசுமை நிறைந்த உ

12வது ஆண்டில் கால் பதிக்கும்

# நியூ ஸ்பை

## நத்தார் புதுவருடத்தை முன்

**FREE FREE**
குடாஸ்
8 கிலோ
பார்பொயில் அரிசி
100 டொலருக்கு மேல் மீன், இறைச்சி மரக்கறி கொள்வனவு செய்வோருக்கு

குடாஸ்
8 கிலோ
பார்பொயில் அரிசி
**$4.99**
50 டொலருக்கு மேல் மீன், இறைச்சி மரக்கறி கொள்வனவு செய்வோருக்கு

**Red Ruby**
900g
மிளகாய்த்தூள்
**$2.99**
$20 டொலருக்கு மேல் மீன், இறைச்சி மரக்கறி கொள்வனவு செய்வோருக்கு

**Nestle**
மைலோ (Milo)
**$2.99**
400g.

**SPECIAL**
குடாஸ்
பார்பொயில் அரிசி
**$7.99** 8Kg.
குடாஸ் வெள்ளை பச்சை அரிசி
**$6.99**

இராசவள்ளிக் கிழங்கு
**99¢/Lb.**
வெள்ளி, சனி, ஞாயிறு தினங்களில் மட்டும்

**Special**
Anchor / Lakspray / Nespray
**$4.99** Each
400g.
No Limit

குடாஸ்
மரக்கறி எண்ணை
**$3.99**
2.5 Lit.
per Can

நண்டுப்பெட்டி
(சிறியது.)
**$5.99**
2 lb.

# வெகுவிரைவில் எமது 2வது கிளை மார்க்

## 5790 Sheppard Ave. E, Unit 4, 5 & 6 Scarborough,

ன் மரக்கறி மீன் இறைச்சி வகைகளில் ஓர் புரட்சி"

# சி லாண்ட் சுப்பர் மார்க்கட்

ட்டு வழங்கும் மாபெரும் அதிரடி மலிவு விற்பனை

குறிஞ்சி
வறுத்த அரிசி மா
8Lb.
$4.99
No Limit

ரவை
10Lb.
$4.99
No Limit

Maggi
தேங்காய்ப் பால் பவுடர்
$2.49
350g.

FIVE ROSE
கோதுமை மாவு
$12.99
20Kg.
per Bag

பிரேமி
அவித்த மாவு
$3.99
per Bag

Dana
பசுமதி அரிசி
$9.99
10Lb.
per Bag

த்திரா
வேரி
குத்தரிசி
.99
Lb.
r Bag

Nature Fresh
U-5
நண்டுப்பெட்டி
$7.99
per Box

M & M
சம்பா அரிசி
$4.99
3kg.
per Bag

Golden Temple
ஆட்டா மாவு
$9.99
per Bag
20Lb.

ம் அன்ட் ஸ்ரீல்ஸ் சந்திப்பில் வரஉள்ளது.

n M1B 5J6 Tel: 416-292-9769 Fax: 416-292-9709

# கந்தகார் விமான கடத்தல் திரைப்படமாகிறது

1999ம் ஆண்டு இந்திய விமானம், ஆப்கானிஸ்தானில் உள்ள கந்தகாருக்கு கடத்தப்பட்ட சம்பவம், பெரும் பரபரப்பை ஏற்படுத்தியது. அந்த சம்பவத்தை அடிப்படையாக வைத்து, ஒரு மலையாள படம் தயாராகிறது. இந்த படத்துக்கு, 'கந்தகார்' என்று பெயர் சூட்டப்பட்டுள்ளது. இதில், ஒரு முக்கிய வேடத்தில், அமிதாப்பச்சன் நடிக்கிறார். இந்த தகவலை, 'கந்தகார்' படத்தை இயக்கும் மேஜர் ரவி தெரிவித்தார்.

அவர் மேலும் கூறியதாவது, இந்திய விமானம் கந்தகாருக்கு கடத்தப்பட்ட சம்பவம், உலகம் முழுவதும் பெரும் பரபரப்பை ஏற்படுத்தியது. அந்த சம்பவத்தை மலையாளத்தில் படமாக்க திட்டமிட்டு இருக்கிறோம். அதில், மோகன்லால்-அமிதாப்பச்சன் ஆகிய இருவரும் இணைந்து நடிக்கிறார்கள்.





இதற்கான கதை விவாதம், கொச்சியில் நடந்தது. அதில், மோகன்லால், அமிதாப்பச்சன் ஆகிய இருவரும் கலந்துகொண்டார்கள். அப்போது, 'கந்தகார்' படத்தின் கதையை அமிதாப்பச்சனிடம் கூறினேன். கதையை கேட்டு அமிதாப்பச்சன் திருப்தி அடைந்தார். கதை தனக்கு மிகவும் பிடித்து இருப்பதாக கூறிய அவர், "இந்த படத்தில் நான் நடிக்கிறேன்" என்று கூறினார். அமிதாப்பச்சன் நடிக்கும் முதல் மலையாள படம் இது. படப்பிடிப்பு வருகிற யூன், ஜூலை அல்லது ஆகஸ்டு மாதம், அமிதாப்பச்சனின் வசதிக்கு ஏற்ப தொடங்கும். கடத்தப்பட்ட பயணி ஒருவரின் அப்பாவாக, அமிதாப்பச்சன் நடிக்கிறார். அவர் சம்பந்தப்பட்ட காட்சிகள் மும்பை அல்லது டில்லி விமான நிலையத்தில் படமாக்கப்படும். படத்தின் இரண்டாம் பாகத்தில், அவர் வருவார். அவருடைய கதாபாத்திரம் கனமானதாக இருக்கும். இந்த படத்துக்காக, ஒரு இளம் தமிழ் நடிகரை தேடிக்கொண்டிருக்கிறேன். (முன்பு, இந்த வேடத்தில் கமல்ஹாசன் நடிப்பார் என்று பேசப்பட்டது.) என இயக்குநர் மேஜர் ரவி கூறினார். இவர், தமிழில் அரண் என்ற படைத்தை இயக்கியவர்.

இதேவேளை, இந்தக் கடத்தல் சம்பவத்தை வைத்து நடிகர் பிரகாஷ்ராஷ் 'பயணம்' என்ற பெயரில் ஒரு படத்தை தயாரிக்கத் திட்டமிட்டுள்ளார். தமிழ், தெலுங்கு மொழிகளில் இப்படத்தை தயாரிக்கும் அதேவேளை, அதில் காவல்துறை உயரதிகாரி வேடத்திலும் அவர் நடிக்கின்றார்.

# நோர்வேயில் தமிழ் பட விழா




முழுக்க முழுக்க தமிழ் படங்களே பங்கேற்கும் திரைப்பட விழா, நோர்வேயில் நடைபெற்றது. நோர்வேயின் தலைநகரான ஒஸ்லோவில், கடந்த 6ம் திகதி தொடங்கிய இந்த பட விழா, கடந்த 9ம் திகதி செவ்வாய்க்கிழமை வரை நடைபெற்றது. மாயாண்டி குடும்பத்தார், பேராண்மை, அஞ்சாதே, பொக்கிசம், பூ, மீண்டும் (நோர்வேயில் தயாரான படம்), ஈ, 1999 (கனடாவில் தயாரான படம்), சுப்பிரமணியபுரம், யோகி, பசங்க, நாடோடிகள், நந்தலாலா ஆகிய 13 படங்கள் பங்கேற்றன. இந்த பட விழாவில் இயக்குநர்கள் எஸ்.பி.ஜனநாதன், சசிகுமார், மிஷ்கின், சமுத்திரக்கனி ஆகிய நால்வர் கலந்துகொண்டார்கள். பட விழாவுக்கான ஏற்பாடுகளை மோசர்பேர் தனஞ்செயன், இசையமைப்பாளர் வி.எஸ்.உதயா, வசீகரன் சிவலிங்கம் ஆகியோர் செய்திருந்தனர். இந்த விழாவில் சிறந்த படம், மக்கள் மனதை அதிகம் கொள்ளைகொண்ட படம் என்பன தேர்ந்தெடுக்கப்பட்டன.

# 9 ஒஸ்கார் விருதுக்கு அவதார் பரிந்துரை



உலகம் முழுவதும் இன்னும் விறுவிறுப்பாக ஓடிக்கொண்டிருக்கும் 'அவதார்' படம், 9 ஒஸ்கார் விருதுகளுக்கு பரிந்துரைக்கப்பட்டுள்ளது. உலகிலேயே உயர்ந்த திரைப்பட விருதாக ஒஸ்கார் விருது உள்ளது. இது கடந்த 81 ஆண்டுகளாக வழங்கப்பட்டு வருகிறது. 82வது ஆண்டாக இந்த விருது விரைவில் வழங்கப்பட இருக்கிறது. இதற்காக திரைத்துறையின் பல்வேறு பிரிவுகளின் கீழ் பல படங்கள் பரிந்துரைக்கப்பட்டுள்ளன. இப்படி பரிந்துரைக்கப்பட்ட பட்டியலில் இருந்து தான் சிறந்த நடிகர், சிறந்த நடிகை, சிறந்த படம், சிறந்த இயக்குநர் போன்றவர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். இதில் சமீபத்தில் வெளியாகி வெற்றிகரமாக ஓடிக்கொண்டிருக்கும் 'அவதார்' படம், மற்றும் 'தி ஹர்ட் லொக்கர்' படம் ஆகியவை தலா 9 விருதுகளுக்கு பரிந்துரைக்கப்பட்டுள்ளன.

சிறந்த படம், சிறந்த இயக்கம், சிறந்த ஒளிப்பதிவு, கலை இயக்குநர், சிறந்த படத்தொகுப்பு, சிறந்த இசை, சிறந்த ஒலிப்பதிவு, சிறந்த ஒலிக்கலவை, சிறந்த காட்சிப் பதிவு ஆகிய 9 பிரிவுகளின் கீழ் அவதார் படம் பரிந்துரை செய்யப்பட்டுள்ளது. ஹஅவதார்' படத்தை டைட்டானிக் படத்தை இயக்கிய ஜேம்ஸ் காமரோன் இயக்கி இருக்கிறார். இதே போல 9 விருதுகளுக்கு பரிந்துரை செய்யப்பட்ட இன்னொரு படம் தி ஹர்ட் லொக்கர் படம், ஈராக் போரை பற்றியது. இந்த படத்தை, அவதார் படத்தை இயக்கிய ஜேம்ஸ் காமரோனின் முன்னாள் மனைவி கேதரீன் பிக்லோ இயக்கி இருக்கிறார். சிறந்த இயக்குநர் விருதுக்காக 5 இயக்குநர்களின் பெயர்கள் பரிந்துரை செய்யப்பட்டுள்ளது. சிறந்த படத்துக்கான விருதுக்கு 11 படங்கள் பரிந்துரைக்கப்பட்டு உள்ளன.

ஜேம்ஸ் காமரோன் 1997ம் ஆண்டு இயக்கிய காதல் காவியமான `டைட்டானிக்` படத்துக்கு 14 விருதுகளுக்கு பரிந்துரை செய்யப்பட்டு, 11 ஒஸ்கார் விருதுகள் கிடைத்தன. தற்போது ஒன்பது விருதுகளோ சிலவேளைகளில் அதற்கும் கூடுதலான விருதுகளோ அவதார் படத்திற்கு கிடைக்கலாம் என்று கொலிவூட் ஆய்வாளர்கள் எதிர்பார்க்கின்றனர். டைட்டானிக் படத்தை விட அவதார் வசூலில் பெரும் சாதனை படைத்து இருப்பதும் குறிப்பிடத்தக்கது.

# சோழர் காலம் தவறாக சித்தரிப்பு

## 'ஆயிரத்தில் ஒருவன்' படத்தை திரையிட தடை விதிக்க வழக்கு

சோழர் காலத்தை தவறாக சித்தரிப்பதால் 'ஆயிரத்தில் ஒருவன்' படத்தை தொடர்ந்து திரையிட தடை விதிக்க வேண்டும் என்று சென்னை சிட்டி சிவில் நீதிமன்றில் வழக்கு தொடரப்பட்டுள்ளது. இதுகுறித்து சோழர் பேரவை என்ற அமைப்பின் நிறுவனர் தலைவர் டி.வி.கே.அழகிரி தாக்கல் செய்துள்ள மனுவில் கூறியிருப்பதாவது, செல்வராகவன் இயக்கத்தில 'ஆயிரத்தில் ஒருவன்' என்ற திரைப்படம் சமீபத்தில் வெளியானது. இந்த படத்தில் சோழர் காலத்தில் நடந்ததாக சில காட்சிகள் காட்டப்படுகின்றன.
உண்மையிலேயே சோழர் காலம் என்பது ஒரு பொற்காலமாக கருதப்பட்டது. உலகத்திலேயே ஜனநாயக ஆட்சியை கொண்டுவந்த முதல் ஆட்சி சோழர் காலத்தில்தான் அமைந்தது.
ஆனால், சோழர்கால சம்பவங்கள் என்று 'ஆயிரத்தில் ஒருவன்' திரைப்படத்தில் சில காட்சிகளை புகுத்தியுள்ளனர். அதில், சோழர்காலம் நாகரிகமற்ற மனிதர்களும், காட்டுமிராண்டிகளும் இருந்த காலகட்டம் என்பது போல் படத்தில் காட்சிகள் வருகின்றன. மனிதர்களை பலி கொடுப்பது போலவும், மக்களை சோழ அரசன் அடிமைகளாக வைத்திருந்ததுபோலவும் காட்சிகள் உள்ளன. மேலும், சோழர் காலத்து மக்கள் பிச்சைகாரர்களாக சித்திரிக்கப்பட்டுள்ளனர். இதைவிட கொடுமையாக பசியாக இருக்கும் பெண் தனக்கு உணவு கிடைப்பதற்காக அரசன் முன்பு மார்பை காட்டிக்கொண்டு நிற்பது போன்ற காட்சியும் வருகிறது.
படத்தின் தொடக்கத்தில், 'இந்த படத்தில் வரும் காட்சிகள் அனைத்தும் கற்பனையே' என்று 'டைட்டிலில்' கூறப்பட்டிருந்தாலும், அதில் உண்மையாக நடந்த சம்பவத்தையும், அப்போது இருந்த நபர்களையும் பற்றி தவறாக சித்தரிக்கின்றனர். கற்பனை என்பது நடந்த சம்பவத்தை கூறுவதாக எடுத்துக்கொள்ள முடியாது. இந்த படத்தால் சோழர் காலத்தை பற்றிய தவறான எண்ணம் வருங்கால தலைமுறைக்கு ஏற்படும் ஒரு மனிதனின் வரலாற்றை கற்பனையாக மாற்றி சித்தரிப்பதற்கு உலகத்தில் யாருக்கும் உரிமை கிடையாது. இதுபோன்ற படத்தால் வரலாறுகள் தவறாக கருதப்பட்டுவிடும். எனவே, இந்த படத்தை மேற்கொண்டு திரையிடுவதற்கு தடை விதிக்க வேண்டும். இந்த படத்துக்கு தணிக்கை துறை வழங்கியுள்ள சான்றிதழை இரத்து செய்வதற்கு தணிக்கைத்துறை இயக்குனருக்கு உத்தரவிட வேண்டும். இவ்வாறு மனுவில் கூறியிருந்தார். இந்த மனு மீதான விசாரணையை நீதிபதி, வருகிற 17ம் திகதிக்கு தள்ளிவைத்தார். அத்துடன், இந்த மனுக்கு பதில் அளிக்கும்படி திரைப்பட தயாரிப்பாளர், இயக்குனர், தணிக்கை துறை இயக்குனர் ஆகியோருக்கு கடிதம் அனுப்பவும் நீதிபதி உத்தரவிட்டார்.



உண்மையின் முன்னால் நடுநிலைமை என்பது இல்லை

# ரஷ்யாவின் சிறீலங்காவுடனான ஒப்பந்தம்: அடுத்த குளிர்கால போருக்கான ஒத்திகையா?

*அனலை நிதிஸ் ச. குமாரன்*

உலகையே தமது ஆழுமையின் கீழ் கொண்டு வந்து மார்க்சியப் பொருளாதாரக் கொள்கையை உலகமெல்லாம் பரப்ப அதற்கு ஒரே மார்க்கம் இராணுவ வலிமையினால் உலக நாடுகளை தமது கட்டுப்பாட்டின் கீழ் கொண்டு வரப் போராடிய சோவியத் ஒன்றியம் பல உலக எதிர்ப்புக்களை கண்டது. அதாவது அமெரிக்கா மற்றும் பல மேற்கத்தைய நாடுகள் சோவியத் ஒன்றியத்தின் ஆக்கிரமிப்பை எதிர்த்து அவர்கள் சோவியத் ஒன்றியத்தின் இராணுவ வலிமையை சிதறடிக்க முடிவெடுத்து பல போர் முனைப்புகளை தமது இராணுவ தந்திரோபாயங்கள் மூலமாக நிறைவேற்றிய காலப்பகுதியை (1945–1991) குளிர்கால போர்க்காலமென அனைவராலும் அறியப்பட்டது.

சோவியத் ஒன்றியம் என்ற வல்லரசு உலகின் பரப்பளவில் கணிசமானதைக் கொண்டுள்ள உலகின் மிகப்பெரிய நாடு. இது ஆசியா, ஐரோப்பா மற்றும் அமெரிக்க கண்டங்களுடன் கடல் மற்றும் நிலத் தொடர்பை கொண்டது. கனடாவுக்குச் சொந்தமான அலாஸ்கா என்ற மாநிலம் அமெரிக்காவுக்குத் தாரை வார்த்துக் கொடுக்கப்பட்டது. காரணம் சோவியத் ஒன்றியம் அலாஸ்காவைக் கைப்பற்றி பின்னர் அமெரிக்கா மற்றும் கனடாவை தமது பிடியின் கீழ் கொண்டு வந்துவிடுவார்கள் என்ற அச்சமே. இப்படியானதொரு வல்லரசு குளிர்காலப் போரின் இறுதிக்கட்டத்தில் அமெரிக்க மற்றும் அதன் தோழமை நாடுகளின் ஆதரவோடு சோவியத் ஒன்றியம் என்ற வல்லரசை பிளவுபடுத்தி பல நாடுகளாக பிரிய வைத்து சோவியத் ஒன்றியம் என்ற வல்லரசு ரஷ்யா என்ற பெயருடன் அமெரிக்கா மற்றும் இதர மேற்கத்தைய நாடுகளிடம் தமது வாழ்வுக்காக கை நீட்ட வேண்டிய நிலைக்கு ஆளாக்கப்பட்டார்கள்.



**தேர்தலில் வெற்றி சூடிய மகிந்த, இரு வாரத்திற்குள் மூன்று நாள் பயணமாக பெப்ரவரி 6, 2010 அன்று தன் முக்கிய அமைச்சர்களுடன் ரஷ்யாவின் தலைநகரான மொஸ்கோ புறப்பட்டார். இந்தப் பயணத்தின் போது அவர் ஒரு ஒப்பந்தத்தை ரஷ்யாவுடன் மேற்கொண்டார். அதாவது இந்த ஒப்பந்த நகலின்படி ரஷ்யாவுடன் 30 கோடி அமெரிக்க டொலர் பெறுமதியான ஆயுத ஒப்பந்தம்.**

### ரஷ்யா இன்னும் பாடம் படிக்கைவில்லைப் போலும்!

ஐரோப்பிய ஏகாதிபத்தியத் தலைவர்கள் குறிப்பாக இத்தாலியை சேர்ந்த முசோலினி, பிரான்சைச் சேர்ந்த நெப்போலியன் மற்றும் யேர்மனியை சேர்ந்த ஹிட்லர் போன்ற தலைவர்கள் முழு ஐரோப்பாவையும் தமது கட்டுப்பாட்டின் கீழ் கொண்டுவந்து தமது தேசத்தின் ஆளுமையை மற்றவர்க்கு காண்பிக்க வேண்டும் என்ற காரணத்தாலும் மற்றும் தமது தேசம் மற்றும் தமது நாடுகளை உலகின் எந்த நாட்டிலும் விட உயர்ந்தவர்கள் என்பதை நிலைநாட்டுவதற்கும் எடுத்த போர் நடவடிக்கைகள் பல கோடி மக்களை ஐரோப்பா இழந்து பல நாடுகள் அழிக்கப்பட்டன. முசோலினி, நெப்போலியன், ஹிட்லர் போன்ற தலைவர்கள் தமது போர் வெறி முரசை தமது மக்களுடன் பரப்பி ஏகோபித்த ஆதரவைப் பெற்று முடிசூடா மன்னர்களாகவே பார்க்கப்பட்டார்கள். இறுதியில் தமது உயிரை மாய்த்து கொண்டார்கள். தமிழில் முருகன் அரக்கனை அழிக்க சூரசம்காரம் எடுத்து சூரனை பல முனை போர் யுக்தியின் பின்னர் கொலை செய்து தர்மத்தை நிலைநாட்டினார். அதைப் போன்றே ஐரோப்பாவிலும் இடம்பெற்றது.

சோவியத் ஒன்றியம் தர்மத்தின் வழி நின்று போராடி உதவி புரிந்தார்கள். பின்னர் அவர்களை எப்படி எல்லாம் முசோலினி, நெப்போலியன், ஹிட்லர் போன்ற தலைவர்கள் தமது படைப்பலத்தை உபயோகித்தார்களோ அதைப் போன்றே சோவியத் ஒன்றியம் செய்தது குளிர்கால தசாப்தத்தின் போது. சோவியத் ஒன்றியம் தனது இராணுவ ஆதிக்கத்தை நேரடியாக மத்திய, தென் கிழக்கு ஆசியா, கிழக்கு ஐரோப்பா மற்றும் மறைமுகமாக பல நாடுகளில் பல வேலைத்திட்டங்களை செய்ய அதன் பரம எதிரியான அமெரிக்காவோ சோவியத் ஒன்றியத்தின் இராணுவ ஆதிக்கத்தை தடுக்க பல வேலைத் திட்டங்களைப் போட்டு, குறிப்பாக ஆப்கானிஸ்தானில் சோவியத் ஒன்றியத்திற்கு ஆதரவாக இயங்கிய தலிபான் இயக்கத்தை அழிக்க அமெரிக்காவோ அல்–ஹைடாவை ஆதரித்து அவர்களுக்கு ஆயுதங்களைக் கொடுத்து தலிபானை தோற்கடித்து சோவியத் ஒன்றியத்தின் இராணுவ வலிமையை செயலிழக்கச் செய்து அவர்களை ஆப்கானிஸ்தானை விட்டே வெளியேற்ற வைத்தார்கள்.

அதுமட்டுமில்லாமல் எங்கெங்கெல்லாம் அவர்களின் ஆதிக்கம் இருந்ததோ அங்கெல்லாம் அமெரிக்காவின் வெளிவிவகாரங்களுக்கு பொறுப்பான உளவுத்துறையான சி.ஐ.ஏ. மூலமாக பல வேலைத்திட்டங்களைத் தீட்டி சோவியத் ஒன்றியத்தின் ஆளுமையை அடக்கினார்கள். அத்துடன் நின்றுவிடாமல் மேலும் ஒரு படிமேல் சென்று சோவியத் ஒன்றியம் என்ற வல்லரசை துண்டாட வைத்து சோவியத் ஒன்றியம் என்ற இராச்சியம் உடைந்து பல நாடுகள் அங்கீகாரம் பெற சோவியத் ஒன்றியமோ தனது பெயரை ரஷ்யா என்று அங்கீகாரம் பெற்றது.

அதன் பின்னர் ரஷ்யா, அமெரிக்கா மற்றும் மேற்கத்தைய நாடுகளின் ஆதரவுடன் பலமிழந்த பொருளாதாரம் மீண்டும் உயிர்ப்பெற்றவுடன் குறிப்பாக கடந்த ஒரு தசாப்த காலப்பகுதிக்குள் ரஷ்யா தனது இராணுவ செல்வாக்கை கிழக்கு ஐரோப்பாவில் காண்பித்து அவற்றிலும் கணிசமான வெற்றியையும் பெற்று அமெரிக்கா மற்றும் பல மேற்கத்திய நாடுகளின் சிம்ம சொர்ப்பனமாக இன்று விளங்கிக்கொண்டுள்ளது. ரஷ்யாவின் இந்த போக்கிற்கு முக்கிய காரணம் ரஷ்யா இன்னும் இராணுவ வலிமையை தக்கவைத்துக் கொண்டிருப்பது. அத்துடன் ரஷ்யா இனிமேலும் அமெரிக்காவையோ அன்றி மேற்கத்தைய நாடுகளையோ பொருளாதார ரீதியாக நம்பவேண்டியதில்லை. காரணம் சீனா மற்றும் இந்தியா ரஷ்யாவின் பாரம்பரிய நேச நாடுகள். அத்துடன் ரஷ்யாவின் இராணுவ தளபாடங்கள் இன்னும் இவ் நாடுகளினால் பெருமளவில் கொள்வனவு செய்து ரஷ்யாவின் பொருளாதாரத்துக்கு உறுதுணையாக இருக்கின்றார்கள். அடுத்ததாக சீனாவும் இந்தியாவும் இன்றைய உலகின் முக்கிய பொருளாதார நாடுகளாக வளர்ச்சிபெற்று உலகின் பொருளாதார ஒழுங்கை இந்நாடுகள் தம் வசம் பெற்றுள்ள தானது, ரஷ்யாவின் அகங்காரத்தை பலமடங்காக உயர்த்தியுள்ளது என்றால் அது மிகையாகாது. ஆக ரஷ்யா தான் பெற்ற பழைய பாடத்தை திரும்பிப்பார்க்கிறார்கள் போல் தெரியவில்லை.

### சிறீலங்கா இன்னொரு குளிர்கால போர்க் களமா?

நான்காம் ஈழப் போர் உக்கிரமடைந்த வேளை தமிழருக்கு எதிரான மனித உரிமை நடவடிக்கைகள் எல்லை மீறிச் சென்ற போது பல மேற்கத்திய நாடுகள் கடும் முயற்சிகளை மேற்கொண்டு அந்த யுத்தத்தை நிறுத்த முயற்சி மேற்கொண்டு அதில் தோல்வியும் கண்டார்கள். பின்னர் இன்னொரு நடவடிக்கையாக ஐக்கிய நாடுகள் சபையின் ஆதரவோடு குறிப்பாக மனித உரிமை அமைப்பின் சார்பில் சிறீலங்கா மனித உரிமை மீறலை விசாரித்து குற்றவாளிகளைத் தண்டிப்பதற்கும் சிறீலங்காவை உலக மன்றத்தின் முன் நிறுத்தி தக்க தண்டனை பெற்றுத்தரச் செய்த முயற்சிகள் ரஷ்யா, சீனா மற்றும் இந்தியாவின் கடும் எதிர்ப்பினால் அதுவும் தோற்றுப்போக பின்னர் மேற்கத்திய நாடுகள் மகிந்த ராஜபக்சவை எப்படியும் நடந்து முடிந்த தேர்தலில் தோற்கடிக்க எத்தனித்தும் அதிலும் தோல்வியுற்றார்கள். ஐக்கிய நாடுகள் அவையின் பாதுகாப்பு சபையின் ஐந்து நிரந்தர உறுப்பு நாடுகளான அமெரிக்கா, இங்கிலாந்து, பிரான்ஸ், ரஷ்யா மற்றும் சீனா தமக்கு உள்ள செல்வாக்கினால் பல நடவடிக்கைகளைத் தடுத்தி நிறுத்தினார்கள். இவர்கள் அனைவரினதும் ஆதரவின்றி உலகத்தில் இராணுவத் தலையீட்டை செய்ய முடியாது. உதாரணத்திற்கு, அமெரிக்கா தன்னிச்சியாக இந்த சபையின் ஆதரவின்றியே ஈராக் மீது படையெடுத்தது. இந்த சம்பவமானது ஐக்கிய நாட்டின் ஸ்திரத்தன்மையையே கேள்விக்குறியாக்கியது. அதைப் போன்றதொரு நிகழ்வை நிச்சயம் அமெரிக்கா சிறீலங்காவில் மேற்கொள்ளத் தயாராகவில்லை. அவர்களுக்கு அவசியமும் இருந்திருக்கவில்லை.

ஆக மேற்கத்தைய நாடுகள் பல தடவைகள் சிறீலங்கா, சீனா, இந்திய மற்றும் ரஷ்சியாவினால் மூக்குடைபட்டார்கள் என்பது தான் உண்மை. இவற்றை நிச்சயம் இந்த நாடுக்ள் எளிதில் மறக்கவும் மாட்டார்கள். இப்படியானதொரு காலகட்டத்தில், குறிப்பாக ஜனவரி 26, 2010 நடைபெற்ற ஜனாதிபதி தேர்தலில் வெற்றி சூடிய மகிந்த, இரு வாரத்திற்குள் மூன்று நாள் பயணமாக பெப்ரவரி 6, 2010 அன்று தன் முக்கிய அமைச்சர்களுடன் ரஷ்யாவின் தலைநகரான மொஸ்கோ புறப்பட்டார். இந்தப் பயணத்தின் போது அவர் ஒரு ஒப்பந்தத்தை ரஷ்யாவுடன் மேற்கொண்டார். அதாவது இந்த ஒப்பந்த நகலின்படி ரஷ்யாவுடன் 30 கோடி அமெரிக்க டொலர் பெறுமதியான ஆயுத ஒப்பந்தம்.

இக்காலகட்டத்தில் இந்த ஒப்பந்தமானது ஒரு முக்கியமானதொன்று. காரணம் மகிந்த அரசினால் கடந்த ஆண்டு அறிவிக்கப்பட்ட புலிகளுக்கு எதிரான யுத்தம் முடிவடைந்து விட்டதாகவும் தனது அடுத்த பணி தமிழ் மற்றும் சிங்கள மொழிகள் பேசும் மக்களிடம் நல்லதொரு உறவை வளர்த்து சீனாவில் எப்படி பொருளாதாரம் முன்னோக்கியுள்ளதோ அதைப்போன்றதொரு பொருளாதரத்தை சிறீலங்காவிலும் கட்டி எழுப்புவதென்று கூறினார்.

2009ம் ஆண்டுக்கான சிறீலங்காவின் பாதுக்காப்பு செலவினங்கள் 175 கோடி டொலர்களாக அதிகரிக்கப்பட்டது. அப்படியானால் 2010ம் ஆண்டின் முற்பகுதியிலே 30 கோடி

(26ம் பக்கம் பார்க்க)

# வர்த்தகம் மூலதனம்

ஜே.ஜே

## இலாபத்தை நோக்கி திரும்பிய யு பி எஸ் வங்கி

சுவிற்சர்லாந்து நாட்டின் யுபிஎஸ் வங்கி ஒரு ஆண்டிற்குப் பின்னர் இலாபம் பெற ஆரம்பித்துள்ளது. கடன்கள் மீதான வட்டி அதிகரிப்பு மற்றும் செலவீனக் குறைப்பினூடாகவே இலாபம் நோக்கித் திரும்பியுள்ளது. 2008ம் ஆண்டு ஒக்ரோபர்-டிசெம்பர் வரையான மூன்று மாத காலப்பகுதியில் 9.58 பில்லியன் சுவிஸ் பிராங் இழப்பினை எதிர்கொண்ட யுபிஎஸ் வங்கி கடந்த ஆண்டு இதே காலப்பகுதியில் 1.2 பில்லியன் சுவிஸ் பிராங் வரியிற்கு முந்திய இலாபமாக பெற்றுள்ளது. 2009ம் ஆண்டின் இறுதி மூன்று மாத இலாபமானது, அவ்வாண்டின் இழப்பினை 2.7 பில்லியனாக மாற்றும் நிலையை ஏற்படுத்தியுள்ளது. ஆயினும் இவ்வங்கியின் தொடர்ச்சியானது பங்குகளின் விலை வீழ்ச்சியினால் கடந்த ஆண்டின் இறுதி மூன்று மாதங்களிலும் 56.2 பில்லியன் பிராங்குகளை வாடிக்கையாளர்கள் திரும்பப் பெற்றது மிகப் பெரிய தாக்கமே. இத்தகைய திரும்பப் பெறுதல் வரும் சில மாதங்களிற்கு தொடரும் என்றே வங்கி நிர்வாகம் எதிர்பார்க்கின்றது. அமெரிக்க வாடிக்கையாளர்களின் 15 பில்லியன் டொலரினை யுபிஎஸ் வங்கி மறைத்து வைத்திருப்பதாகவும், அதன் விபரம் தமக்குத் தரப்படவேண்டும் என்று அமெரிக்க திறைசேரி தொடர்ந்தும் நெருக்குதலை ஏற்படுத்தி வருகின்ற நிலையில், இதற்கான தீர்வினை விரைவில் எட்டிவிட உள்ளதாக சுவிஸ் வங்கி தெரிவித்துள்ளது. ஜேர்மனியுடனும் இதே இநிலை நீடிக்கின்றது. வரி ஏய்ப்பாளர்களின் உறைவிடம் எனக் கருதப்பட்டுவந்த சுவிஸ் நாட்டில் தற்பொழுது பல மாறுதல்கள் தென்படத் தொடங்கியுள்ளமை, அவர்களிற்கு வரும் அண்மைய காலங்கள் சாதகமாக அமையப்போவதில்லை என்பதையே கோடிட்டுக் காட்டி வருகின்றன.




## வலுவாகிவரும் யூரோ

பிரித்தானிய பவுண்டஸ், அமெரிக்க டொலர் என்பனவற்றிற்கு எதிராக ஐரோப்பிய யூரோ வலுப்பெற்று வருகின்றது. ஐரோப்பிய நாடுகள் சிலவற்றின் கடன்கள் அதிகரித்துச்செல்வதால் யூரோ மீண்டும் சரிவை நோக்கிச் சென்றுவிடுமோ என்ற அச்சம் நாணய மாற்று வர்த்தகர்கள் மத்தியில் மேலோங்கிய நிலையிலேயே உள்ளது. கிறீஸ், ஸ்பெயின், போர்த்துக்கல் போன்ற நாடுகளில் பாதீட்டு பற்றாக்குறை அதிகளவில் காணப்படுவதன் காரணமாக, கடந்த மாதம் யூரோவின் பெறுமதியில் பெரும் சரிவு ஏற்பட்டிருந்தது. பவுண்ட்ஸ், டொலர்கள் என்பவற்றிற்கு எதிராக முறையே 0.5 வீதம், 0.3 வீதம் என யூரோ 88 பென்சாகவும், 1.375 டொலராகவும் மாற்றங் கண்டுள்ளது. கிறீஸ் தனது பாதீட்டு பற்றாக்குறையான 12.7 வீதத்தை மூன்று ஆண்டுகள் வேலைத்திட்ட அடிப்படையில் நிவர்த்தி செய்யவுள்ளதாக அறிவித்துள்ளதுடன் அதன் உள்நாட்டு மொத்த உற்பத்தியின் இலக்கை 2.8 வீதம் ஆகவும் நிர்ணயித்துள்ளது. இந்த 12.7 வீதம் ஆனது ஐரோப்பிய ஒன்றியத்தின் விதிமுறையின் அளவினை விட நான்கு மடங்கு அதிகமானது. 2001ம் ஆண்டு யூரோவை தனது நாட்டில் நடைமுறைப்படுத்தியது முதல் கிறீஸ் பெரும் பற்றாக்குறையினை எதிர்கொண்டு வருகின்றது. அதே சமயம் யூரோ நாணயம் புழக்கத்திலுள்ள 16 நாடுகளின் விற்பனையானது 0.4 வீதத்தால் மட்டுமே அதிகரித்துள்ளது. அதிக விற்பனை நடைபெறும் மாதமான டிசெம்பரில் 1. வீத வளர்ச்சியே ஏற்பட்டிருந்தது.

27 நாடுகளைக் கொண்ட ஐரோப்பிய ஒன்றியத்தின் நாடுகளின் ஆகக்கூடிய விற்பனையாக ஓகஸ்ட் மாதம் 1.64 விகிதம் நடைபெற்றுள்ளது. அதேசமயம் ரூமேனியாவின் விற்பனையோ 5.4 வீதத்தால் வீழ்ச்சியுற்றுள்ளது. வோல்ஜிக் நாடுகளான லற்வியா, லித்துவேனியா, எஸ்ரோனியா என்பனவற்றின் விற்பனையானது ஆண்டுக்கு ஆண்டு குறைவுற்று வருவதும், வேலை அற்றோர் எண்ணிக்கை அதிகரிப்பும், ஐரோப்பிய பொருளாதாரத்தினை முடக்க நிலைக்கே கொண்டு செல்வது ஆக்கபூர்வமற்ற தன்மையையே வெளிக்காட்டுகின்றது. இந்நிலையில் சில நாடுகள் யூரோ நாணய புழக்கத்தில் இருந்து விடுபடலாம் என்ற அபாய செய்தியும்

டொலர்கள் ரஷ்யாவில் நடைபெற்ற ஒப்பந்தத்தின் மூலம் ஒதுக்கப்படுகின்றது. இன்னும் எத்தனை நூறு கோடி ஆயுதங்களை சீனா, பாகிஸ்தான், இந்தியா, ஈரான் மற்றும் வட கொரியாவிடம் இருந்து கொள்வனவு செய்ய உத்தேசித்துள்ளார்கள் என்பது தான் பலரிடத்தில் உள்ள ஐயம்.

இவ்வளவு முஸ்தீபும் எதற்காக இப்பொழுது என்பது தான் நம்மில் பலரின் கேள்வி. மகிந்தவின் காய் நகர்த்தல்கள் பல் சந்தேகங்களை உருவாக்கியுள்ளது. முக்கிய சந்தேகங்களில் ஒன்று என்னவென்றால் ரஷ்யா இந்தியப் பெருங்கடலில் அண்மித்திருக்கும் நாடுகளில் தனது செல்வாக்கை அதிகரித்து இருக்கவில்லை. அமெரிக்கா, இங்கிலாந்து போன்ற நாடுகள் இந்த பிராந்தியத்தில் தமது செல்வாக்கை வைத்திருந்தார்கள். காரணம் அவர்கள் இன்றும் தமது கடற்படைகளை பல நாடுகளில் வைத்துள்ளார்கள். அடுத்து அவர்கள் பயங்கரவாதத்திற்கு எதிரான யுத்தம் என்ற போர்வையில் இன்று பல நாடுகளில் தமது நேரடி இராணுவ நடவடிக்கைகளையும் மற்றும் மறைமுகமாக பல இராணுவ தந்திரோபாய வேலைகளை இந்த பிராந்தியத்தில் வைத்துள்ளார்கள்.

அத்துடன் சீனாவோ தனது செல்வாக்கை தென் சீனக் கடல் மற்றும் பசிபிக் பெருங்கடலுக்கு அப்பால் சென்று குறிப்பாக இந்தியாவை அண்டிய கடற்பிராந்தியத்தில் தனது செல்வாக்கை அதிகரித்துள்ளார்கள். இந்த நிலையில் ரஷ்யாவும் சிறீலங்காவை நெருங்கிய நட்பு நாடாகத் தேர்ந்தெடுத்து அதற்கு ஆயுத விநியோகங்களை குறிப்பாக புலிகளுக்கெதிரான யுத்தம் முடிவடைந்த பின்னர் அளித்திருப்பதானது நிச்சயம் அமெரிக்கா மற்றும் பல மேற்கத்திய நாடுகளின் கசப்புணர்வை எதிர்கொள்ள வேண்டி வரும் என்பது மட்டும் திண்ணம். பலரின் சந்தேகம் என்னவென்றால் இந்த நாடுகள் எப்படி சிறீலங்கா, சீனா, ரஷ்ய கூட்டு நடவடிக்கைக்ளை எதிர்கொண்டு ஒரு சமபலத்தை அந்தப் பிராந்தியத்தில் கொண்டு வருவது என்பது நிச்சயம் அமெரிக்கா மற்றும் அதன் கூட்டு நாடுகள் ஏற்கனவே சிந்தித்து நடவடிக்கை எடுக்க முனைந்துகொண்டு இருக்கும் என்பது மட்டும் உண்மை.

எப்படி தலிபானை தோற்கடிக்க அல்-ஹைடாவை அமெரிக்கா பாவித்து அதிலும் வெற்றி கண்டதோ அதே பாணியிலான வேலைத்திட்டங்களை நிச்சயம் சிறீலங்காவிலும் அமெரிக்காவின் உளவுத்துறை வேலைத்திட்டங்களை தீட்டி அதற்கு உயிர் ஊட்டுவதற்கு ஒன்றும் பல காலம் தேவைப்படாது. ஆனாலும் இது சாத்தியமா என்பது தான் பலரிடையே உள்ள கேள்வி. விடுதலைப் புலிகளை அழித்து அதன் தலைவரை எரித்து நந்திக்கடலில் சாம்பலை கரைத்துவிட்டதாக மார்தட்டும் சிங்கள தலைமை, சிவப்பு துவாய் சாத்தி தன்னை ஒரு மார்க்சிஸ்ட் வாதி என்ற மமதையில் உலா வரும் மகிந்த அந்த கொள்கையுடைய ரஷ்யா மற்றும் சீனாவுடன் உறவை நெருக்கி இரண்டாவது முறை ஜனாதிபதியாக தேர்ந்தெடுக்கப்பட்டவுடன் ரஷ்யாவிற்கு பயணமாகி திரும்பியிருப்பதானது அவர் மேற்குலகத்தின் மீதும் அமெரிக்கா மீதும் கரி பூசியுள்ளார் என்பது தான் மறைக்கமுடியாத உண்மை.

எது எப்படியாயினும் சிறீலங்கா, ரஷ்யாவின் இராணுவத் தொடர்பைப் பேணுவார்களாயின் நிச்சயம் சிறீலங்கா மற்றொரு குளிர்கால யுத்தக்களமாக மாறி, அமெரிக்காவின் நீண்ட நாள் வியூகமான அதாவது சீனாவை தனது கைவசம் கொண்டு வந்து வட கொரியா சர்வாதிகார ஆட்சியை நடாத்தும் அரசாங்கத்தையும் அதன் அணு ஆயுத செயல்பாடுகளையும் மற்றும் வட கொரியாவின் சவாலையும் அடக்கி அமெரிக்கா மற்றும் அதன் நட்பு நாடுகள் இந்தியப் பெருங்கடலிலும் அதன் அண்டிய நாடுகளையும் தமக்கு சார்பானதாக கொண்டு வர எந்த விலையும் கொடுக்க முன்வருவார்கள் என்பதை மட்டும் நிராகரிக்க முடியாது. இதற்கு ராஜபக்ச ஒரு உந்துசக்தியாக இருக்கின்றார்.

### எதற்கு மகிந்தவிற்கு கலாநிதிப் பட்டம்?

ஒரு வழக்கறிஞரான மகிந்த பல கலாநிதிப் பட்டங்களை தன் வசம் வைத்துள்ளார். இவர் இதனைப் படித்து ஒன்றும் பெறவேயில்லை. இப்படிப் பட்ட கலாச்சாரம் ஆசியாவில் தொடர் நிகழ்ச்சியாகவே இருக்கின்றது. ஒருவர் பொருளாதாரத்திலோ, அரசியலிலோ, பொது வாழ்க்கையிலோ உயர்ந்தால் அல்லது ஏன் பணம் படைத்தோர் பல்கலைக்கழகங்களுக்கு பணம் கொடுத்து இப்படிப் பட்ட பட்டங்களை பெற்று தமது பெயரின் முன்னால் தாம் கலாநிதி என்றோ அல்லது டொக்டர் என்றோ சொல்லி சமுகத்தில் தாம் ஏதோ படித்த மேதாவிகள் என்று காண்பித்து தமது கல்வியால் பெற முடியாதென்ற ஆதங்கத்தை தமது வாழ்நாளில் பெறுகின்றார்கள்.

இப்படிப்பட்ட நிகழ்ச்சிகள் பல மேற்கத்தைய நாடுகளில் நடைபெற்றாலும் வருடத்தில் ஒரு குறிப்பிட்டவர்களே தெரிவாகின்றார்கள். குறிப்பாக கனேடியப் பல்கலைக்கழகம் கடந்த சில வருடம் முன்னர் மைக்ரோசாப்ட் நிறுவனத்தின் அதிபர் பில் கேட்சிற்கு கலாநிதி பட்டம் வழங்க முடிவெடுத்தார்கள். பல எதிர்ப்புகளுக்குப் பின்னர் அவருக்கு அளிக்க இருந்த அந்த கலாநிதி பட்டத்தை தடுத்து நிறுத்தினார்கள். இருப்பினும் மகிந்த பெற்ற கலாநிதி பட்டம் ரஷ்யாவின் பலகலைக்கழகத்தினால் வழங்கப்பட்டது.

மகிந்த மொஸ்கோ சென்றவுடன் கிரெம்ளின் மண்டபத்தில் நடைபெற்ற மக்கள் நட்புறவுப் பல்கலைக்கழகத்தின் 50 ஆண்டு விழாவில் வைத்து கலாநிதிப் பட்டம் வழங்கிக் கௌரவிக்கப்பட்டார். பலரிடையே உள்ள சந்தேகம் என்னவென்றால் மகிந்தவுக்கு அளிக்கப்பட்டிருக்கும் இந்த கௌரவம் எதற்காக இவர் தனது ஆட்சியில் மிகப்பெரிய இனச்சுத்திகரிப்பு யுத்தத்தை நடாத்தி பல ஆயிரம் தமிழ் மக்களைக் கொன்று, தமிழரின் சொத்துக்கள், கலாச்சார விழுமியங்களை அழித்து பல இலட்சம் தமிழரை தங்களது தாயகத்திலேயே அகதிகளாக்கி சொல்லொணாத் துயரத்தை ஏற்படுத்தி வரும் இந்த பேரினவாத தலைவருக்கு இந்த பல்கலைக்கழகத்தினால் அளிக்கப்பட்டிருக்கும் கௌரவமானது நிச்சயம் தமிழரின் நெஞ்சில் ஏவிய அம்பு போன்றதான செயல். காரணம் இந்த உலகப் பல்கலைக்கழகம் மகிந்த செய்த அட்டூழியங்களுக்கு அளித்திருக்கும் பரிசாகவே இந்தப் பட்டத்தை நாம் கருத வேண்டும். அத்துடன் இவர்களைப் போன்ற அரச தலைவர்கள் பல அட்டூழியங்களை தொடந்து செய்வதற்கு அங்கீகாரம் அளிப்பது போன்றதாகவே கருத வேண்டிவரும்.

அத்துடன் இப்பட்டமளிப்பானது ரஷ்ய அரச ஆதரவோடு இடம்பெற்றிருப்பது நிச்சயம் ரஷ்யாவின் தமிழர் விரோத கொள்கையை எடுத்தியம்பி நிற்கின்றது. தமிழினம் கண்டிராத பேரவலத்திற்கு ஆயுதத்தை விநியோகம் செய்து தமிழரை அழிக்க உதவிய ரஷ்யா, சீனா, இந்தியா மற்றும் பல நாடுகள் தங்களின் தொடர் ஆதரவினால் நிச்சயம் சிறீலங்கா எஞ்சியிருக்கும் ஈழத் தமிழரின் வாழ்வாதாரத்தையும் அழிக்க வழிகோலும் என்பது தான் உண்மை. நம் முன்னோர்கள் கூறியது போன்று நாரதரின் கலகச் செயல் நிச்சயம் ஒரு விடிவைத் தரும் என்று கருதி நாளை நமதே என்ற நம்பிக்கையுடன் பயணிப்போமாக.

இதற்கு அமெரிக்கா, இங்கிலாந்து, பிரான்ஸ், ஜெர்மனி மற்றும் பல மேற்கத்திய நாடுகள் எப்படி ரஷ்யா மற்றும் சிறீலங்கா இடையிலான இராணுவ ஒப்பந்தத்தையும் மற்றும் எதிர் காலத்தில் நடக்க இருக்கும் பல்வேறு நடவடிக்கைகளையும் கையாள்வார்கள் என்பது தான் இப்போ நம் எல்லோர் மனதிலும் உள்ள கேள்வி.

எது எப்படியாயினும் இப்படியான சம்பவங்கள் நிச்சயம் அமெரிக்கா மற்றும் பல மேற்கத்திய நாடுகளை விழிப்படையச் செய்யும் என்பது மட்டும் உண்மை. ஆக சிறீலங்கா இன்னொரு குளிர்காலப் போருக்கு வழி வகுத்துக் கொடுக்குமா அல்லது கேந்திர முக்கியத்துவமான இலங்கைத் தீவு குறிப்பாக தமிழ் ஈழத்தின் தலைநகரான திருகோணமலையை யார் வந்து போனாலென்ன நாம் உலக சட்ட வரை முறையின் கீழ் கரையில் இருந்து 500 மைலுக்கு அப்பால் பயணித்தால் யாவரும் நலம் என்ற பாணியில் அமெரிக்கா மற்றும் உலக சக்திகள் இருக்குமா என்பது தான் நம்மில் பலருக்குள் எழும் சந்தேகம்.

ஈழத் தமிழரின் தாயகப் பூமியையும் அவர்களின் கடல் வளத்தையும் யாராலும் அசட்டை பண்ண முடியாது காரணம் பல ஆயிரம் கப்பல்கள் இந்த பகுதியைத் தாண்டித் தான் செல்கின்றன. உலக சக்திகளின் ஒரே கவலை யாரை நம்பி முதலிடுவதென்பது காரணம் இந்த உலக மக்கள் இன்று முதலாளித்துவப் பொருளாதாரத்தையே நம்பி வாழ்க்கை நடாத்திக் கொண்டிருக்கின்றார்கள். ஆகவே ரஷ்யா சிறீலங்காவை நம்பி முதலீடு செய்துள்ளது. ஆக ஈழத் தமிழினம் யாரை நம்பி முதலீடு செய்வது என்பது தெரியாமல் ஒரு திருசங்கு நிலையிலுள்ளது. எது எப்படியாயினும் தமிழரின் தாகம் தமிழ் ஈழத் சுதந்திரத் தாயகம் பிறந்தால் எம் அனைவருக்கும் மகிழ்ச்சியே.

உண்மையின் முன்னால் நடுநிலைமை என்பது இல்லை

# உலகறிந்த ஊடகவியலாளன்



## நாட்டுப்பற்றாளர்
## புண்ணியமூர்த்தி சத்தியமூர்த்தி

அழகான, அளவான சிரிப்பு, அடக்கமான பண்பு, அதிராத பேச்சு, ஆங்கில வார்த்தைகளை அதிகமாக உச்சரிக்கின்ற அறிவு.

எல்லாவற்றுக்கும் மேலாய், எல்லோருடனும் ஒட்டி உறவாடி உபசரிக்கும் இயல்பு. சிறுமைகளைக் கண்டால் மட்டும் அதிகமாய் வியர்த்து படபடப்போடு சீறும் தனித்துவம், அத்தனைக்கும் சொந்தக்காரன் பு.சத்தியமூர்த்தி. 36 வயதில் ஊரறிய, உலகறிய நெஞ்சு நிமிர்த்தி நின்ற ஊடகவியலாளன்.

தன் தகைமை உயர உயர தன்னுடைய தன்னடக்கத்தையும் சமமாக வளர்த்துக் கொண்டவன். யாருடன் பேசவேண்டுமெனினும் அருகே வந்து அக்கா என்றோ, அண்ணா, தம்பி, தங்கை என்றோ உறவு கொண்டாடிய உள்ளத்துடையவன்.

2009 இன் முற்பகுதியில் உக்கிரம் கொண்டு உருவேறிய யுத்தத்தில் மிக மிக அப்பாவித்தனமாய் ஒரு சிறிய உருக்கிரும்புத் துண்டின் கிழிப்பால் மண்ணில் சாய்ந்து விட்டான். அறிவு மிக்க, பண்புமிக்க பெற்றோருக்குப் பிறந்து, யாழ் மண்டைதீவில் பதிந்து, யாழ் மண்ணில் தனது இளம்பருவத்தை எழுதிக் கொண்டவன்.

பத்திரிகையாளனாய், புகைப்படக்காரனாய், இலக்கியப்படைப்பாளியாய் உலகமெங்கும் உண்மைகூறும் ஊடகக்காரனாய் சத்தியமூர்த்தி சாதித்தவை ஏராளம்.

உலக நாடுகளில் ஊடகவியலாளன் சத்தியமூர்த்தியை கண்ணீர் மல்க அஞ்சலித்தனர் என்பதே அவன் ஆளுமைக்குச் சான்று. தன் சக மனிதர்களை ஊக்குவிப்பதிலும், இளயவர்களை வளர வைப்பதிலும் இவனது பங்கு ஏராளம்.

'நெற்றிப்பொட்டில்' அறையும் இவனது விமர்சனங்கள். எத்தனையோ மேடைகள் இவனுக்குப் பரிச்சயம். அழகான படைப்புகளை ஆழமாகப் படிக்கும் நிதானம். ஓர் ஊடகவியலாளனுக்கே உரிய எளிமையும், தன்னலமின்மையும் எல்லாவற்றையுமே எழுத்தில் வடிக்க முடியாத செயல்களின் உரித்துடையோன்.

எந்நேரமும் இவனிடம் சிறகுகட்டி நிற்கும் ஆர்வம் அரசியல் போக்குகளில் இவன் கொண்டிருந்த ஈடுபாடு. நேரகாலம் பார்க்காத கடும் உழைப்பு, கடின உழைப்பு

'ஏர் ஏறாது, எருது இழக்காது' என்ற 'மஹாகவி' உருத்திரமூர்த்தியின் கவிதைகளை அடிக்கடி மேற்கோள் காட்டும் சத்தியமூர்த்தி பார்ப்பதற்கு மென்மையும் பழகுகையில் உறுதியும் கொண்டவன். வன்னி மண்ணிலிருந்து ஊடகவியலாளனாக செயற்பட்ட அவரின் பணிகளை வெறுமனே பட்டியலிட்டு விடமுடியாது. ஒரு மனிதன் தான் பிறந்த மண்ணுக்கு என்னவெல்லாம் செய்வானோ, அவற்றை இவனும் செய்தான். சமூகத்தின் அடிப்படை மனிதனாக வெகு இயல்பாக வாழ்ந்தவன். எதிர்காலம் பற்றிய எத்தனையோ கனவுகளுடனும் கற்பனையுடனும் இருந்தவன்.

தனது குழந்தை பிறந்து மூன்றாவது நாள் வருடப்பிறப்புக்கு கூட முதற்பரிசாக 'பஞ்சதந்திரக் கதைகள்' என்ற பெரிய நூலையே பரிசளித்திருந்தான். அத்தோடு நிற்காது இளைஞர்களை நோக்கி கனவுகண்ட அப்துல்கலாமின் 'அக்கினிச் சிறகுகள்' நூலூடாகத் தனது மகளின் எதிர்காலத்தை நோக்கிக் கனவு கண்டவன். தனது மகளின் அறிவுக்கு புத்தகங்களையே பரிசளித்து அறிவூட்டியவன் தான் இந்த சத்தியமூர்த்தி. உறவினர், நண்பர்களின் குழந்தைகளையும் அரவணைப்பதில் அவர்களின் எதிர்காலம் பற்றி கவலைப்படுவதில் இவனுக்கு நிகர் யாருமில்லை.

வன்னிப் பெருநிலப்பரப்பிலிருந்து இயங்கிய கட்புல, செவிப்புல ஊடகங்கள் அனைத்திலும் இவனது பங்களிப்பு இருந்தது. 'எழு' என்கின்ற கலை இலக்கிய வட்டத்தின் அடித்தளமாக, ஆணிவேராக இருந்து வெளியீடுகள், பயிற்சிப் பட்டறைகள் மூலம் இலக்கிய இளவல்களை வெளிக்கொணர்ந்தவன். மிகக் குறுகிய காலத்துள் தனக்கென்று தனிமுத்திரை பதித்தவன். பல தளங்களில் இயங்கியவன்.

'கல்கங்களில் தான் நியாயங்கள் பிறக்கும்' என்பதற்கு அமைய முடிவு கிடைக்கும்வரை விவாதிக்கும் உளத்தூய்மை சத்தியமூர்த்தியின் சொத்து. இவனது வீடு ஓர் இலக்கிய கூடம்போல இருக்கும். 'வரவிருந்தோம்பி நல்விருந்து காத்திருக்கும்' பண்பாளன். இவனுடைய வீட்டில் எத்தனை இலக்கிய சந்திப்புகள் நடந்திருக்கின்றன? எத்தனை திருமணங்கள் நடந்திருக்கின்றன? எல்லாமே நெஞ்சு கனக்கும் நினைவுகளாக நெருடுகின்றன.

நாளுக்கு நாள், நேரத்துக்குநேரம் மூட்டைமுடிச்சுகளுடன் இடம்பெயரும் அவலத்தின் மத்தியிலும் தன் ஊடகப்பணியை செய்து கொண்டிருந்தான் சத்தியமூர்த்தி. வெளிநாடுகளில் வசிக்கும் புலம்பெயர்ந்த தமிழ் மக்கள் சத்தியமூர்த்தியின் கருத்துக்களால் ஈர்க்கப்பட்டிருந்தனர்.

புலம்பெயர் தமிழ் மக்களின் ஊடகங்களில் இவன் படைப்புக்கள் பதிவாகின. கூடவே குரலும் ஒலித்தது. இவனது தெளிவான, தீர்க்கமான செய்திகளும், செய்திப்பார்வைகளும் இவனைப் புலம்பெயர் தமிழ் மக்கள் நேசிக்கக் காரணமாயின.

2009இன் பெப்ரவரி 12 ஆம் திகதி வன்னிப் பகுதியில் உக்கிர சண்டையின் நடுவே, கையில் அகப்பட்ட பொருட்களுடன் உயிரைப் பாதுகாக்க இடம்பெயர்ந்த மக்களுடன் தானும் தன் குடும்பத்துடன் இடம் பெயர்ந்தான்.

மனிதப்பேரவலத்தின் நடுவே நொறுங்கிய இதயத்தோடு அத்தியாவசிய தேவைக்காக நின்றவன் மீது எங்கோ விழுந்து வெடித்துச் சிதறிய எறிகணையின் சிறுதுண்டொன்று எங்கள் ஊடக நண்பன், இலக்கியத்தோழன் சத்தியமூர்த்தியின் நெஞ்சறைக்குள் பாய்ந்தது.

சிலமணிப்பொழுதுகளில் - மருத்துவம் ஏதும் பயனளிக்காது சத்தியமூர்த்தி சாவைத் தழுவிக்கொண்டான். சத்தியமூர்த்தியின் சாவு சாதாரணமானதன்று. உலகறிந்த ஊடகவியலாளன் சத்தியமூர்த்தியும் பேரினவாதத்தின் ஊழிக்குப் பலியாகிய செய்தி எல்லோரையும் கலங்க வைத்தது.

இடப்பெயர்வு அவலத்தின் மத்தியிலும் சத்தியமூர்த்திக்கு அஞ்சலி நிகழ்வு இடம்பெற்றது. புலம்பெயர்ந்த மக்கள் இவனது சாவுக்குக் கலங்கியதோடு புகழஞ்சலி செலுத்தினர்.

வீரன் ஒருபோதும் வீழ்வதில்லை. ஆம் சத்தியமூர்த்தி என்றும் எங்களுடன் வாழ்வான்.

இரா.சிவசக்தி

மன உழல்வு
என்னை நோக்கி விரல்கள்
நீள்கின்றன
அவற்றின் முனைகளில்
ஆயிரம் ஆயிரம்
உணர்முனைகள் – அவை
என்னை நோக்கி கேள்வி
கணைகளைச் சொரிகின்றன.

ஊற்றெடுக்கும் நாளைய
மகாநதியில்
ஏன் உந்தன் வியர்வை
சிந்தியிருக்கவில்லை?
என்னை நோக்கி வீழும்
விரல்களின்
உணர்முனைகளின் கேள்வியின்
நியாயம்
குடையைக் குடையவென் மனது
துடிக்கிறது
நிற்கதியாய்.

- பு. சத்தியமூர்த்தி

# மரண அறிவித்தல்

அன்னையின்
மடியில்
1928







ஆண்டவனின்
அடியில்
16-02-2010

## திரு. மாணிக்கம் குமாரசாமி

இருபாலையை பிறப்பிடமாகவும், வதிவிடமாகவும் கொண்ட மாணிக்கம் குமாரசாமி அவர்கள் 16-02-2010 அன்று இலங்கையில் காலமானார்.

அன்னார் காலஞ்சென்ற தங்கம்மாவின் அன்புக் கணவரும், காலஞ்சென்ற மாணிக்கம் - பறுவதம் அவர்களின் பாசமிகு மகனும், காலஞ்சென்ற கந்தையா - மனோன்மணி அவர்களின் பாசமிகு மருமகனும்,

சகுந்தலாதேவி (கனடா), காஞ்சனாதேவி (இலங்கை), பிறேமாவதி (சுவிஸ்), ரவிச்சந்திரன் (இலங்கை) ஆகியோரின் பாசமிகு தந்தையும், மூர்த்தி (K. S .Auto உரிமையாளர், கனடா), அன்று (ஜேர்மனி), அன்பழகன் (சுவிஸ்), ஆகியோரின் பாசமிகு மாமனாரும்,

சந்திரன் அஜீதா (Golumbia Video உரிமையாளர், கனடா), சஞ்ஜீவன், தனேஜா (கனடா), செந்துஜா, ஜேந்தா (சுவிஸ்) ஆகியோரின் பாசமிகு பேரனும், விசாலின் (கனடா) பூட்டனும், காலஞ்சென்ற வல்லிபுரம் இராசையா, செல்லத்துரை ஆகியோரின் மைத்துனரும்,

மனோன்மணி (இலங்கை), காலஞ்சென்ற சின்னப்பா, காலஞ்சென்ற கனகமணி ஆகியோரின் பாசமிகு சகோதரரும், சுப்பிரமணியம் (இலங்கை), புனிதவதி (இலங்கை), காலஞ்சென்ற பரராசசிங்கம், குகதாஸ் (மூர்த்தி) (K. S. Auto உரிமையாளர், கனடா), தேவதாஸ் (சுவிஸ்), ஜெகதாஸ் (இத்தாலி), கஸ்மதி (இலங்கை), வசந்தமலர் (இலங்கை), யோகநாதன் (இலங்கை) ஆகியோரின் அன்பு மாமனாரும்,

றஜனகுமார், பாமதி, மாலதி, கேமதி, சுதாமதி, உஷாமதி, யசோமதி, றஜனி, றவீஸ்குமார் ஆகியோரின் பெரியதகப்பனும் ஆவார்.

அன்னாரின் பூதவுடல் 17-02-2010 புதன்கிழமை மதியம் 1:00 மணியளவில் செக்கடி இந்து மயானத்தில் தகனம் செய்யப்பட்டது. இவ் அறிவித்தலை உற்றார், உறவினர், நண்பர்கள் அனைவரும் ஏற்றுக்கொள்ளும்படி கேட்டுக் கொள்கின்றோம்.

**தொடர்புகளுக்கு:**
**416-297-1034** மூர்த்தி சகுந்தலா
**647-883-7702** மூர்த்தி
**647-801-9103** அஜீதா

தகவல்
மூர்த்தி சகுந்தலா

## கமல் வேர்கர் அறிமுகம்



ஒட்டக இறைச்சி வேர்கர் துவாயில் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளது. உடலிற்கு தன்னிறைவு தரும் இவ் ஒட்டக வேர்கர்களில் கொழுப்பு முழுமையாக நீக்கப்பட்டுள்ளது. 125 கிராம் எடை கொண்ட் ஒட்டக இறைச்சி பால்கட்டியுடன் இணைத்து இருபது ஐக்கிய அரபுக் குடியரசு டினாருக்கு (5.45 டொலர்) விற்கப்படுகிறது. சாதாரணமாக ஒட்டக இறைச்சியில் அதிக கொழுப்பும், கடினமானதாகவுமே இருக்கும். ஆனால் இவர்களோ கொழுப்பு நீக்கத்தோடு, இறைச்சியையும் மென்மைப்படுத்தியுள்ளனர். சில அரேபிய நாடுகளில் பரவலாக ஒட்டக இறைச்சி உண்ணப்படுகின்றது. ஆனால் இவ் வகையான இறைச்சி பெரிய கடைத் தொகுதிகளிலோ அன்றி உணவு விடுதிகளிலோ இதுவரை விற்பனையாகவில்லை. சவுதி அரேபியாவில் கடந்த வருடம் குட்டி ஒட்டக இறைச்சியிலான வேர்கர் அறிமுகப்படுத்தப்பட்டிருந்தது. கமல் வேர்கரின்ன அறிமுகம் செய்தது ஐக்கிய அரபுக் குடியரசே. இவ்விரைவு உணவு அப்பகுதி மக்களையும், உல்லாசப்பிரயாணிகளையும் மிகவும் கவர்ந்துள்ள நிலையில், உலகில் உயரமான கட்டடமான வூர்ஜ்ஹலியா இலும் கிளை ஒன்று திறப்பதற்கான முயற்சியும் மேற்கொள்ளப்பட்டு வருகின்றது.

## ஏலத்தில் விற்கப்பட்ட லற்வியாவின் நகரம்




இது போன்ற பல நகரங்கள் அதன் வரைபடத்தில் இன்றும் காணமுடியாத நிலையில் உள்ளன. 1991இல் சோவியத் ஒன்றிய சிதைவினை அடுத்து சுதந்திர நாடாக லற்வியா உருவானதுடன், ரஷ்ய துரப்புக்களையும் வெளியேற்றியது. ஆயினும் நான்கு வருட ஒப்பந்த



அடிப்படையில் ஸ்ருறுண்டாவின் முன்னறிவிப்பு எச்சிரிக்கை முறை பெறப்பட்டு வந்தது. இவ்வாறு 1995ம் ஆண்டு மேமாதம் பெச்சோரா எனும் பெயர் சூட்டப்பட்டு உருவாக்கப்பட்ட ராடர் திரையானது 60 மீற்றர் உயரம் கொண்டது. பின்நாளில் இது அமெரிக்காவால் இடித்து நொருக்கப்பட்டது. 1998இல் ஸ்ருறுண்டா –1இன் இறுதி குடியிருப்பாளரும் வெளியேறியதைத் தொடர்ந்து அந்நகரம் வெறிச்சோடியிருந்தது. இறுதியாக இரண்டு ஆண்டுகளிற்கு முன்னர் இந்நகரினை ஏலத்தில் விற்பதற்கு லற்வியா அரசு முடிவு செய்திருந்தது. இதனை வாங்கிய ரஷ்ய செல்வந்தரின் உள்நோக்கம் என்ன என்பது புரியாத புதிராகவே உள்ளது.

## புனரமைக்கப்பட்ட பழமைவாய்ந்த மடாலயம்

உலகில் மிகவும் பழமை வா்ய்ந்த மடாலயம் எகிப்தில் புனரமைக்கப்பட்டுள்ளது. புனித அந்தோனியார் மடாலயம் என அழைக்கப்படும் இம்மடாலயம் பழமைவாய்ந்தது மட்டுமன்றி புகழ்பெற்றதும் கூட. 1600 ஆண்டுகள் வரலாற்றினைக் கொண்ட இந்த மடாலயம் 14 மில்லியன் டொலர் செலவில் புனரமைப்பதற்கு எட்டு ஆண்டுகளிற்கு மேல் காலம் தேவைப்பட்டது. கொப்ரிக் மொழி பேசுபவர்களின் பிரசித்தி பெற்ற யாத்திரிகர் ஸ்தலம் இதுவாகும். ஒரு சகாப்தத்தின் முன்னர் எகிப்தில் நடைபெற்ற மிக மோசமான மதக்கலவரத்தில் இந்த மடாலயம் சிதைக்கப்பட்டதுடன், ஆறு கொரிக் மொழிபேசுபவர்களும் சுட்டுக்கொல்லப்பட்டிருந்தனர். நத்தார் பண்டிகைக்கு முந்தைய நாள் இச்சம்பவம் நடைபெற்றது. உலக கத்தோலிக்க மதத்தவர்களை பெரிதும் வேதனைக்குள்ளாக்கி இருந்தது. சுவெஸ் நகரத்தில் புனரமைக்கப்பட்ட இம்மடாலயம் எகிப்தில் இஸ்லாமிய கத்தோலிக்க மதத்தவர்களிடையேயான ஒருமைப்பாட்டின் வெளிப்பாடாகவே காணப்படுகின்றது எனத் தெரிவிக்கப்பட்டுள்ளது. செங்கடலிற்கு அண்மித்த பகுதியில் மூன்றாம் நூற்றாண்டின் இறுதியில் சென் அந்தனிஸ் குகை ஒன்றினை அமைத்து தனிமையில் வணங்கப் பட்டுவந்தது.




## மதுபோதையில் பள்ளிச் சிறுவர்களை ஏற்றிச் சென்றவர் கைது

மதுபோதையில் இருக்கைகளின் எண்ணிக்கையின் மூன்று மடங்கு பள்ளிச்சிறுவர் களை சிறிய பேரூந்தில் ஏற்றிச் சென்றவரை தென் ஆபிரிக்க காவல்துறையினர் கைது செய்துள்ளனர். பதினாறு இருக்கைகள் கொண்ட சிறிய பேரூந்தில் ஒருவர்மேல் ஒருவராக நாற்பத்தொன்பது பள்ளிச் சிறார்களை ஏற்றிச்சென்றவர், சோதனைச் சாவடியில் தடுத்து நிறுத்தப்பட்டபோதே, இருக்கைகளின் எண்ணிக்கையைவிட அதிகளவு சிறார்கள் இருப்பதைக் கண்ட காவல்துறையினர் சாரதியை அணுகிய போதே, அவர் மதுபோதையில் அச்சிறார்களை பாடசாலைக்கு அழைத்துச் சென்றது தெரியவந்தது. மூன்று தொடக்கம் பதின்மூன்று வயதுவரையான சிறார்களே, ஐந்து மடங்கு மதுபோதையில் இருந்த சாரதியினால் அழைத்துச் செல்லப்பட்டிருந்தனர்.



குவாசுலு நற்றல் பிராந்தியத்திலே காவல்துறையிடம் 26 வயதுடைய அச்சாரதி சிக்கியுள்ளார். மூன்று மாதங்களில் தென் ஆபிரிக்காவில் உலகக்கிண்ண இறுதிச்சுற்று நடைபெறவுள்ளதால், அங்கு செல்கின்ற வெளிநாட்டவர்கள் ஏமாற்றப்படும் நிலையைத் தடுக்கும் நோக்கில் காவல்துறையினர் தமது நடவடிக்கையை முடுக்கிவிட்டுள்ளனர். பல மில்லியன் தென் ஆபிரிக்க கறுப்பு இன மக்கள் தாம் வசிக்கும் மாகாணங்களில் இருந்து நகர்ப்புறங்களிற்கு செல்வதற்கு இத்தகைய சிறிய பேரூந்துகளையே பயன்படுத்தி வருகின்றனர். இருக்கைகளிற்கு மீறிய பிரயாணிகளை ஏற்றுவது, பிரயாணத்திற்கு ஏற்ற போதிய வீதிகள் இல்லாமை என்பவற்றால் ஆபத்தை விளைவிக்கக்கூடிய விபத்துக்கள் அங்கு நடைபெறுவது ஒரு வழமையான நடவடிக்கையாகவே காணப்படுகின்றது.

## காதலர்தின றோசாவிற்குக் கொக்கெயின்

றோசாப் பூக்களிற்கிடையே கொக்கெயின் மறைத்து வைத்திருந்தது கண்டுபிடிக் கப்பட்டுள்ளது. லத்தீன் அமெரிக்க நாட்டில் இருந்து வந்த 20,000 றோசாப்பூக்களிடையே கொக்கெயின் மறைத்து வைத்திருந்ததை, நெதர்லாந்தின் அம்ஸ்ராம் விமான நிலைய சுங்க அதிகாரிகள் கண்டுபிடித்துள்ளனர். எதிர்வரும் 14ம் திகதி காதலர் தினம்



கொண்டாடப்படவுள்ளது அறிந்ததே. அத் தினத்தில் காதலர்கள் தமது அன்புப்பரி மாற்றத்தின் அடையாளமாக றோசாப்பூக்களைக் கொடுத்து மகிழ்வதுண்டு. றோசாப் பூக்களை கொலம்பியாவின், பொகற்றா விமான நிலையத்தில் ஏற்றிய விமானம், போர்த்தோ ரிக்கோவில் தரித்தே அம்ஸ்ரர்டாம் வந்து சேர்ந்தது. 1.3 மில்லியன் யூரோ பெறுமதியான கொக்கெயின் கண்டுபிடிக்கப்பட்டதை அடுத்து 3 நெதர்லாந்த வர்களை காவல்துறையினர் கைது செய்துள்ளனர். உலக பூ ஏற்றுமதியில் 60 விகிதத்தை நெதர்லாந்தே மேற்கொள்கின்றது என்பதுடன் மிகப்பெரிய ஏலமும் இங்குதான் நடைபெறுகின்றது.

*அமெரிக்கா*

## வடகொரியா தீவிரவாத நாடில்லை – ஒபாமா

வடகொரியாவை தீவிரவாத நாடாக அறிவிக்க வேண்டிய தேவை இல்லை என்று அமெரிக்க ஜனாதிபதி ஒபாமா அறிவித்துள்ளார். கொம்யூனிஸ்ட் நாடான வடகொரியாவை அமெரிக்க ஜனாதிபதியாக இருந்த புஷ் தான் போக்கிரி நாடு என்று வர்ணித்து பெரும் சர்ச்சையை உருவாக்கியிருந்தார்.

1987ம் ஆண்டு நவம்பர் மாதம் 29ம் திகதி கல் என்ற விமான நிறுவனத்தின் விமானத்தை வடகொரியாவின் முகவர்கள் குண்டு வைத்து தகர்த்தனர். இதில் பயணம் செய்த 115



பேர் பலியானார்கள். இதைத்தொடர்ந்து அடுத்த ஆண்டே ஜனவரி மாதம் 20ம் திகதி வடகொரியாவை தீவிரவாத நாடாக அமெரிக்கா அறிவித்தது. இதன்பிறகு வடகொரியா தன் அணு ஆயுத தயாரிப்பை கைவிட முன்வந்ததை தொடர்ந்து அந்நாட்டுடன் பேச்சுவார்த்தை நடந்தது. இதில் ஏற்பட்ட முன்னேற்றத்தை தொடர்ந்து தீவிரவாத நாடு என்ற பட்டியலில் இருந்து அந்த நாட்டின் பெயர் நீக்கப்பட்டது. புஷ் நிர்வாகமே அந்த நாட்டின் பெயரை தீவிரவாத நாடுகள் பட்டியலில் இருந்து நீக்கியது.

இந்நிலையில் அந்த நாட்டை மீண்டும் தீவிரவாத நாடுகள் பட்டியலில் சேர்க்கவேண்டும் என்று பல அமெரிக்க செனட் சபை உறுப்பினர்கள் கோரினார்கள். இந்த கோரிக்கையை ஏற்க அமெரிக்க ஜனாதிபதி ஒபாமா மறுத்து விட்டார். வடகொரியாவை தீவிரவாத நாடாக அறிவிக்க வேண்டிய தேவை ஏதும் இல்லை என்று அவர் கூறினார்.

இதுதொடர்பாக அவர் கூறியிருப்பதாவது, ஒரு நாட்டை தீவிரவாத நாடாக அறிவிப்பதற்கு என்று சில சட்டரீதியான அம்சங்கள் உள்ளன. இந்த அம்சங்களின் கீழ் வடகொரியா வரவில்லை. இதனால் அந்த நாட்டை தீவிரவாத நாடாக அறிவிக்க இப்போது எந்த தேவையும் ஏற்படவில்லை என்றார்.

இதேவேளை, இதுபற்றி வெளிவிவகாரச் செயலகம் விடுத்த அறிவிப்பில், அந்த விமானத் தாக்குதல் சம்பவத்துக்கு பிறகு வடகொரியா தீவிரவாதத்தை தூண்டிவிடும்படியான எந்த நடவடிக்கையிலும் ஈடுபடவில்லை என்று தெரிவித்தது.

*சீனா*

## ஆட்கடத்தலில் ஈடுபட்ட 25 பேருக்கு மரண தண்டனை!

சீனாவில் பணம் பறிப்பதற்காக ஆட்களை கடத்தும் 25 பேருக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டுள்ளது. குவாங்டோங் மாநிலத்தில் உள்ள குவாங்சவ் நகரில் உள்ள இரு நீதிமன்றங்கள் இந்த தீர்ப்பை வழங்கின. மற்றும் 26 பேருக்கு 20 ஆண்டு சிறைத் தண்டனை விதிக்கப்பட்டன. பணத்துக்காக கடத்தப்பட்டவர்களில் ஒருவர் கொல்லப்பட்டார். அவர் குடும்பத்தினருக்கு நட்டஈடு வழங்கப்பட்டது.

இதேவேளை, சீனாவில் ஆண்டு தோறும் ஆயிரக்கணக்கானவர்களுக்கு மரண தண்டனை நிறைவேற்றப்படுவதாக மனித உரிமை அமைப்புகள் குற்றஞ்சாட்டி உள்ளன. 2008ம் ஆண்டு மட்டும் 1700 பேருக்கு அங்கு மரண தண்டனை நிறைவேற்றப்பட்டதாக புள்ளிவிபரம் ஒன்று தெரிவிக்கின்றது.

*அமெரிக்கா*

## தீவிரவாத செயல்களில் ஈடுபடுவர் அமெரிக்கர் என்றாலும் மரணதண்டனைதான்




வெளிநாடுகளில் தீவிரவாத செயல்களில் ஈடுபடுபவர்கள் அமெரிக்க பிரசைகளாக இருந்தாலும் அவர்களுக்கு மரண தண்டனை தான் என அந்நாட்டு உளவுத்துறை கூறியுள்ளது. உலகம் முழுவதும் தீவிரவாதத்துக்கு எதிராக அமெரிக்கா நடவடிக்கை எடுத்து வருகிறது. வெளிநாடுகளில், தீவிரவாத செயல்களில் ஈடுபடுபவர் அமெரிக்கராக இருந்தாலும், அவரை அழிக்குமாறு முந்தைய புஷ் அரசு உத்தரவிட்டு இருந்தது. தற்போதைய அதிபர் ஒபாமாவும் புஷ்சின் கொள்கையை கடைபிடித்து வருவதாக அமெரிக்க ஊடகங்களில் செய்தி வெளியானது.

இந்நிலையில், இதுபற்றி அமெரிக்க நாடாளுமன்ற உளவு ஆணைக்குழு விசாரணை நடத்தியது. அதன் அங்கமாக, அமெரிக்க தேசிய உளவுப்பிரிவு இயக்குனர் ரென்னிஸ் பிளேர் இடமும் விசாரணை செய்யப்பட்டது. அப்போது அவர் நாடாளுமன்றத்தில் ஆஜராகி விளக்கம் அளித்தார். அப்போது அவர் கூறியதாவது, வெளிநாடுகளில் தீவிரவாத செயல்களில் ஈடுபடும் அமெரிக்கர்களையும் அமெரிக்கா கொன்று வருகிறது. இதற்காக விசேட அனுமதி பெறப்படுகிறது. கொலை செய்வதற்கு முன்பு, அந்த அமெரிக்கர், அமெரிக்காவை தாக்க திட்டமிடும் கும்பலில் சேர்ந்து இருக்கிறாரா? அவரால் மற்ற அமெரிக்கர்களுக்கு ஆபத்தா? என்று ஆய்வு செய்வது வழக்கம். இந்த தகவலை நான் வெளிப்படையாக சொல்வதற்கு காரணம், இதைப் பார்த்துக் கொண்டிருக்கும் மற்ற அமெரிக்கர்கள், நாங்கள் அக்கறையின்றி இருப்பதாக நினைத்து விடக்கூடாது என்பதற்காகத்தான். மனித உயிர்களுக்கு அச்சுறுத்தல் இருப்பது பற்றி நாங்கள் அக்கறையின்றி இருக்க முடியாது. அதிலும், அமெரிக்கர்களின் உயிருக்கு ஆபத்து என்றால் நாங்கள் வேடிக்கை பார்க்க முடியாது. ஏனென்றால், நாட்டை பாதுகாக்க வேண்டிய கடமை எங்களுக்கு உள்ளது என்று அவர் கூறியுள்ளார். அமெரிக்க உளவுப்பிரிவான சி.ஐ.ஏ.வின் கொலைப் பட்டியலில் 3 அமெரிக்கர்கள் இருப்பதாக அந்நாட்டிலிருந்து வெளியாகும் தகவல்கள் தெரிவிக்கின்றன.

*ஈரான்*

# விண்வெளிக்கு உயிரினங்களை அனுப்பியது
# அனைத்துலக தடைகளை கொண்டுவருமாறு அமெரிக்காவும் பிரான்சும் வலியுறுத்தல்

ஈரான் தனது விண்கலத் தொழில்நுட்ப வல்லமையை வெளிப்படுத்தும் வகையில் எலி, ஆமை மற்றும் பல்வேறு புழு கொண்ட விண்கலம் ஒன்றை விண்வெளிக்கு அனுப்பியுள்ளது. கவோஷ்கர்-3 என்ற இந்த விண்கலத்தில் எலியையும், 2 ஆமைகளும் பல்வேறு புழுக்களும் அனுப்பப்பட்டுள்ளன. இதனை அந்நாட்டு அதிபர் அதிபர் மக்மூத் அகமதினிஜாத் அறிவித்தார்.

இந்த விண்கலத்தை அனுப்பியதன் மூலம் ஈரான் ஈடு இணையில்லாத அறிவியல் மைல்கல்லை தொட்டிருப்பதாக ஈரான் அதிபர் பெருமையாக கூறினார். அத்துடன் இந்த விண்கலம் அனுப்பியதன் மூலம், தொழில்நுட்ப போட்டியில் ஈரான் மேற்கத்திய நாடுகளைத் தோற்கடிக்க முடியும் என்பதையே காட்டுகிறது என்றும், இதை விட பெரிய சாதனைகளை எதிர்காலத்தில் ஈரான் சாதிக்கும் என்றும் அவர் கூறினார். இந்த விண்கலம் எங்கிருந்து அனுப்பப்பட்டது என்பதையோ, எப்போது அனுப்பப்பட்டது என்பதையோ ஈரான் வெளியிடவில்லை. எனினும், ஓராண்டுக்கு முன்புதான் ஈரான் உள்நாட்டிலேயே தயாரிக்கப்பட்ட தகவல் தொழில்நுட்ப செயற்கைக்கோளை பூமியின் சுற்றுப்பாதைக்கு அனுப்பியது என்பது குறிப்பிடத்தக்கது.

இதேவேளை, விண்வெளிக்கு ஈரான் ஆமை அனுப்பியது இதுவே முதல் முறை. ஆனால், விண்வெளிக்கு உயிரனங்களை அனுப்புவது ஒன்றும் அறிவியல்துறையில் புதிதல்ல. 1961ம் ஆண்டு பிரான்ஸ் முதல்முறையாக எலியை விண்வெளிக்கு அனுப்பியது. இதைத்தொடர்ந்து சீனா 1964 மற்றும் 65ம் ஆண்டுகளில் சுண்டெலிகளை அனுப்பியது. சோவித் ஒன்றியம் முதல்முறையாக ஆமையை 1968ல் விண்வெளிக்கு அனுப்பியது. இதன் பின்னர் பல உயிரினங்கள் பல்வேறு நாடுகளின் மூலம் விண்வெளிக்கு அனுப்பப்பட்டு உயிரியல் சோதனைகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

இந்நிலையில் ஈரான் தனது ஆமைத்திட்டத்தை பெருமையாக அறிவித்திருப்பது ஏன் என்பது குறித்து நாசா விஞ்ஞானிகள் கூறுகையில், தனது நாட்டின் பாதுகாப்பு தொடர்பான தொழில்நுட்ப வளர்ச்சியை ஈரான் அமைதியான முறையில் வெளிப்படுத்துகிறது. மத்திய கிழக்கில் உள்ள போர் முனையங்கள் மீது ஈரான் தனது விண்கலத்தை செலுத்த முடியும் என்பதை தான் இந்த அறிவிப்பு வெளிப்படுத்துகிறது` என்றனர்.

இதுஇவ்வாறிருக்க, ஈரான் விண்கலத்தை அனுப்பியதாக அறிவித்த மூன்றாவது நாள், இரு இடங்களில் ஏவுகணை உற்பத்தி நிலையங்களை தொடங்கியுள்ளது. இதனை அந்நாட்டின் பாதுகாப்பு அமைச்சர் அகமது வாஹ்தி திறந்துவைத்தார். தரையிலிருந்து விண்ணிலுள்ள இலக்கைத் தாக்கும் 'காயெம்' என்ற ஏவுகணை, உலங்குவானூர்திகளைத் தாக்க வல்லது. இதையும், தரையிலிருந்து கிளம்பி, தரையிலக்கைத் தாக்கும் 'டூஃபான்' ஏவுகணையையும், இவ் ஏவுகணை மையங்கள் உற்பத்தி செய்யும். ஈரானில் நடந்த இஸ்லாமியப் புரட்சியின் 31வது ஆண்டு நிறைவை ஒட்டி, இத்த ஏவுகணை உற்பத்தி நிலையங்கள் திறக்கப்பட்டுள்ளன.

இதேவேளை, ஈரான் நாட்டில் உள்ள நடான்ஸ் அணு உலைக்கூடத்தில் யுரேனியத்தை 20 சதவீதம் தூய்மையான




நிலையில் செறிவூட்டும் பணியை ஐ.நா. அணுசக்தி கண்காணிப்பு குழு அதிகாரிகள் மேற்பார்வையின் கீழ் கடந்த வாரம் தொடங்கியது.

நிலைமை இவ்வாறிருக்க, ஈரான் தனது அணுசக்தி திட்டத்தை துரிதப்படுத்தி வருவதாக அறிவிக்கப்பட்டுள்ள நிலையில், அந்நாட்டுக்கு எதிராக புதிய அனைத்துலக ஏற்றுமதி தடைகளை கொண்டு வருவதைத் தவிர வேறு வழியில்லை என்று அமெரிக்காவும் பிரான்சும் தெரிவித்துள்ளன. மேற்குலக நாடுகளின் இந்தக் கருத்தை ஈரான் நிராகரித்துள்ளது. இந்தப் பிரச்சினையை சுமுகமான முறையில் தீர்க்க அனைத்துலக நாடுகள் கூட்டாக இணைந்து செயற்பட வேண்டும் என்று பரிஸ் நகரில் கருத்து வெளியிட்ட அமெரிக்க பாதுகாப்புச் செயலர் ரொபர்ட் கேட்ஸ் கருத்து வெளியிட்டுள்ளார். அணு ஆயுதம் ஒன்றை தயாரிப்பதில் முன்னேற்றம் கண்டு வரும் ஈரான் அதனை முற்றாக நிறுத்திவிடும் அறிகுறிகள் எதுவும் தமக்கு தென்படவில்லை என்று அவர் தெரிவித்துள்ளார். ஈரானின் நடவடிக்கைகள் மிரட்டும் வகையில் உள்ளது என்று பிரெஞ்சு வெளியுறவு அமைச்சர் பேர்னாட் கொஸ்னர் கூறியுள்ளார். யுரேனியச் செறிவூட்டலை மேலும் மேம்படுத்த தாங்கள் பல நடவடிக்கைகளை எடுத்துள்ளதாகவும், இதற்காக அடுத்த ஆண்டு மேலும் பல ஆலைகளை நிறுவ தாங்கள் திட்டமிட்டுள்ளதாகவும் ஈரான் அறிவித்துள்ளது குறிப்பிடத்தக்கது.

*கெய்ட்டி*

## 29 நாட்களின் பின்னர் ஒருவர் உயிருடன் மீட்பு

கெய்ட்டி தீவில் ஏற்பட்ட நில நடுக்கத்தில் சிக்கி இடிபாடுகளுக்குள் கிடந்த ஒருவர் 29 நாட்களுக்குப் பிறகு உயிருடன் மீட்கப்பட்டுள்ளார். இனி யாரும் உயிருடன் இருக்கமுடியாது என்ற நிலையில் சர்வதேச மீட்புப் பணியாளர்கள் கடந்த மாதம் 23ம் திகதியுடன் தேடுதல் வேட்டையை நிறுத்தியிருந்தனர். இந்நிலையிலேயே ஒருவர் 29 நாட்களின் பின் மீட்கப்





பட்டுள்ளார். போர்ட் ஆப் பிரின்ஸ் சந்தைப் பகுதியில் மீட்புக் குழுவினர் கட்டட இடிபாடுகளை அகற்றிக் கொண்டிருந்த போது ஒரு கை தெரிந்துள்ளது. சடலம் கிடக்கிறது என நினைத்த மீட்புக் குழுவினர் உடலை வெளியே இழுத்தனர். அப்போது உடலில் மூச்சு இருப்பது தெரியவந்தது. உடனே மருத்துவமனைக்கு கொண்டு சென்றனர். முதலுதவி சிகிச்சைக்குப் பிறகு அவர் பேசத் தொடங்கினார். அவர் பெயர் முன்சி. 28 வயதாகிறது. முன்சி உயிர் பிழைத்தது அதிசயமாக இருக்கிறது. உடலில் பெரிய அளவில் காய மில்லை. ஆனாலும் 29 நாட்கள் ஒருவர் தண்ணீர் இல்லாமல் இருப்பது முடியாத காரியம். மிகவும் சோர்ந்து போய் இருக்கும் முன்சி, முன்னுக்குப் பின் முரணாகப் பேசுகிறார். அவர் குழப்பத்தில் இருக்கிறார். தெளிவதற்கு இன்னும் சில நாட்கள் ஆகும் என சிகிச்சை அளித்த மருத்துவர் மைக் கானலி தெரிவித்துள்ளார்.

இதேவேளை, கெய்ட்டி மக்களுக்கு உணவு வழங்கும் பணியில் ஈடுபட்ட அமெரிக்க உலங்குவானூர்தி ஒன்று அருகே உள்ள டொமினிக்கன் குடியரசு நாட்டின் ரெஸ்ட் டோரேசியன் என்ற இடத்தில் மலை மீது மோதி விபத்துக் குள்ளாகியது. இதில் பயணம் செய்த இரு விமானிகளும் பலியானார்கள். இந்த விபத்துக்கான காரணம் என்ன என்பது தெரியவில்லை.

கெய்ட்டி தீவில் கடந்த மாதம் 12ம் திகதி நிலநடுக்கம் ஏற்பட்டது. இதில் போர்ட் ஆப் பிரின்ஸ் நகரத்தில் இருந்த அதிபர் மாளிகை உட்பட அனைத்து பெரிய கட்டடங்களும் இடிந்து விழுந்தன. இதன்போது உயிரிழந்தவர்களின் எண் ணிக்கை தற்போது 2 இலட்சமாக உயர்ந்துள்ளது. 3 இலட்சம் பேர் காயம் அடைந்துள்ளனர். அவர்களில் 4 ஆயிரம் பேர் உடல் உறுப்புகளை இழந்துள்ளனர். இந்தத் தகவலை ஹெய்ட்டி பிரதமர் ஜ?ன்- மாஸ் பெல்லரிவ் தெரிவித்துள்ளார்.

இதற்கிடையே கெய்ட்டியில் இருந்து 33 குழந்தைகளைக் கடத்த முயன்றதாக அமெரிக்கர்கள் மீது சந்தேகப்பட்டு அவர்களைக் கைது செய்தது துரதிஷ்டவசமானது. காரணம் அக்குழந்தைகளுக்கு உதவி செய்ய வேண்டும் என்பதே அவர்களின் நோக்கம் என அமெரிக்க வெளியுறவுத்துறை அமைச்சர் கிலாரி கிளிண்டன் தெரிவித்துள்ளார்.

*பிரித்தானியா*

# பாடசாலை மாணவிகளுக்கு கர்ப்பப் பரிசோதனை

## மாணவர் விசா விதிமுறைகளை கடுமையாக்கவும் முடிவு

பிரித்தானியா லிவர்பூல் நகரில் 5 உயர்நிலைப் பாட சாலைகளில் 13 வயதான ஆயிரக்கணக்கான மாணவி களுக்கு கர்ப்ப பரிசோதனை நடத்த நகராட்சி நிர்வாகம் திட்ட மிட்டுள்ளது. லிவர்பூல் நகரில், 15 முதல் 17 வயதுக்குட்பட்ட ஆயிரம் மாணவிகளில் 52 பேர் கர்ப்பம் தரிப்பதாக ஒரு புள்ளி விவரம் தெரிவிக்கிறது. இது அந்நாட்டின் அளவில் ஆயிரம் மாணவிகளுக்கு 41.7 மாணவிகள் என புள்ளிவிபரம் ஒன்று கூறுகின்றது. எனவே, இதைக் கட்டுப்படுத்தும் நோக் கத்தில், கர்ப்ப பரிசோதனை நடத்துவதாக லிவர்பூல் நகராட்சி நிர்வாகம் தெரிவித்துள்ளது. 11 வயதில் இருந்து இந்தப் பரி சோதனை மேற்கொள்ள முடியும் என்று தெரிவிக்கப்படுகின் றது.



எனினும், நகராட்சியின் இந்த முடிவிற்கு கலாசார அமைப் புகள் கடும் எதிர்ப்பு தெரிவித்துள்ளன. தவறான உறவில் ஈடுபடுவது குற்றமல்ல என்ற மனப்பான்மையையே இந்தப் பரிசோதனைகள் மாணவிகளிடம் ஏற்படுத்தும் என்று அவை கூறுகின்றன.

இதுஇவ்வாறிருக்க, மாணவர் விசா வழங்குவதில் கடுமை யான விதிமுறைகளை பின்பற்ற பிரித்தானியா முடிவெடுத் துள்ளது. பிரித்தானிய உள்துறை செயலாளர் அலன் ஜோன் சன் இதுதொடர்பாக வெளியிட்டுள்ள அறிக்கையில், `பிரித் தானியாவில் கல்வி கற்க விரும்பும் உண்மையான வெளிநாட்டு மாணவர்களை நாங்கள் அன்புடன் வரவேற்று வருறோம். இனிமேலும் வரவேற்போம். ஆனால், மாணவர் விசாக்களை பயன்படுத்தி வேலைக்காக பிரித்தானியாவுக்கு வருபவர் களின், சட்டவிதிமுறைகளை மீறிய, எங்கள் அமைப்பை குலைக்கும் செயல்களை அனுமதிக்க முடியாது. எனவே புதிய விதிமுறைகளை உருவாக்கியுள்ளோம். இதன்படி, ஐரோப்பிய ஒன்றியம் தவிர பிற நாடுகளில் இருந்து வரும் மாணவர்களுக்கு ஆங்கில புலமை உள்ளிட்ட தேர்வுகள் கடுமையாக்கப்படும். பட்டப்படிப்புக்கு கீழுள்ள படிப்புகளை தேர்வு செய்யும் மாணவர்கள் வாரத்துக்கு 10 மணி நேரம் மட்டுமே வேலை பார்க்க அனுமதிக்கப்படுவார்கள். (தற்போது 20 மணி நேரமாக உள்ளது).

ஆறு மாதத்துக்கும் குறைவான பயிற்சி காலத்தை கொண்ட படிப்புகளுக்கு மாணவர்கள் தங்களுடன் யாரையும் அழைத்து வர அனுமதிக்கப்பட மாட்டார்கள். அதேபோல், பட்டப் படிப் புக்குக் கீழுள்ளவற்றை தேர்ந்தெடுத்து படிக்கும் மாண வர்களுடன் வருபவர்கள் வேலை செய்ய அனுமதிக்கப்பட மாட்டார்கள்.

பட்டப் படிப்புத் தரத்துக்கு கீழ் உள்ள படிப்புகளை நடத்தும் நிறுவனங்கள், தற்போது அரசால் திருத்தப்பட்டுள்ள நிறுவனப் பட்டியலில் இடம்பெற்றிருக்க வேண்டும் என்ற புதிய விதியும் பின்பற்றப்பட உள்ளது' எனக் கூறப்பட்டுள்ளது.

*வங்கதேசம்*

# பாதுகாப்புப் படைகளை பலப்படுத்த 10 ஆண்டுத் திட்டம்

வங்கதேச அரசு தங்களது நாட்டு முப்படைகளையும் பலப்படுத்த 10 ஆண்டுத் திட்டத்தை வகுத்து, அமலப்படுத்தி யுள்ளது. தேசப் பாதுகாப்புக்கு ஏற்படும் எவ்வித அச்சுறுத்தல் களையும் சமாளிக்கும் விதமாக முப்படைகளையும் மேம் படுத்த அந்நாட்டு அரசுத் திட்டமிட்டுள்ளது. நாடாளுமன்றத் தில் பாதுகாப்புப் படைகளின் வலிமை குறித்து அந்நாட்டு எதிர்க்கட்சிகள் எழுப்பிய கேள்விக்கு திட்ட அமைச்சர்



கந்தகோர் எழுத்து மூலம் அளித்த பதிலில் இதைத் தெரி வித்துள்ளார்.

இராணுவம், கடற்படை, விமானப் படை ஆகிய மூன்று படைகளை வலுப்படுத்த அரசு திட்டமிட்டுள்ளது. இதற்காக 10 ஆண்டுத் திட்டம் வகுக்கப்பட்டுள்ளது. அதன் ஒரு பகு தியாக மூன்று படைப் பிரிவுக்கும் உடனடியாகத் தேவைப் படக்கூடிய ஆயுதங்களும், கருவிகளும் வாங்கப்படும். அரசு, இதற்கான ஒப்புதலை அளித்ததுடன், தேவையான நிதியும் ஒதுக்கீடு செய்துள்ளது. இந்த நிதியின் மூலம் 7 பீரங்கிகள், பல்வேறு விதமான 85 போர்க்கருவிகள், 2 உலங்குவானூர் திகள், போர் விமானங்கள் உள்ளிட்டவை வாங்கப்படும். தவிர, உள்நாட்டு ஆயுத உற்பத்தி தொழிற்சாலையின் உற் பத்தித் திறனை இரு மடங்கு அதிகரிக்க அரசு முடிவெ டுத்து இதற்கும் போதுமான நிதி ஒதுக்கீடு செய்யப் பட்டுள்ளது என்று அமைச்சர் கந்தகோர் தெரிவித்துள்ளார்.

*ஐரோப்பா*

# 27 நாடுகளுக்கும் பொதுவாக ஒரே இராணுவம்

ஐரோப்பிய ஒன்றியத்தில் அங்கம் வகிக்கும் 27 நாடுகளுக் கும் பொதுவாக ஒரே இராணுவம் அமைப்பதற்கான முயற் சிக்கு ஜேர்மனி ஆதரவு தெரிவித்துள்ளது. இது தொடர்பாக அந்நாட்டு வெளிவிவகார அமைச்சர் கைடோ வெஸ்டர்வெல் கூறுகையில், ஐரோப்பிய நாடாளுமன்றத்தின் கட்டுப்பாட்டின் கீழ் ஐரோப்பிய இராணுவம் ஒன்றை அமைப்பது என்பது நீண்டகால இலட்சியமாக இருக்கிறது. அது நடைமுறை சாத் தியமானது தான். அதை விரைவில் செயல்படுத்த வேண்டும் என்று குறிப்பிட்டார். இதற்கு பல ஐரோப்பிய நாடுகள் ஆத ரவு தெரிவித்துள்ளன. அப்போது தான் உலக அளவில் ஐரோப்பா பெரும் பங்காற்ற முடியும் என்று அந்த நாடுகள் கருதுகின்றன. ஐரோப்பிய நாடுகள் அனைத்துக்கும் (ஒரு சில நாடுகள் இதில் இணையவில்லை) பொதுவான நாணய மாக ஈரோ ஏற்கனவே அறிமுகப்படுத்தப்பட்டு உள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

*நேபாளம்*

# சர்வதேச அளவில் குழந்தைகள் தத்தெடுப்புக்குத் தடை விதிப்பு

சர்வதேச அளவில் ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டுக் குக் குழந்தைகள் தத்தெடுக்கப்படுவதைக் கண்காணிக்கும் உலக அமைப்பு, நேபாளத்திலிருந்து வெளிநாடுகளுக்குக் குழந்தைகள் தத்தெடுக்கப்படுவதை நிறுத்திவைக்கும்படி பரிந்துரை செய்துள்ளது. நேபாள குழந்தைகளைத் தத்தெடுக்



கும் நடைமுறைகளில் முறைகேடுகள் நடப்பதாகவும், இத னால் இந்த நடைமுறையை நிறுத்தவேண்டும் என்றும் இந்த அமைப்பு வெளியிட்டிருக்கும் வரைவு அறிக்கையில் கூறப் பட்டுள்ளது.

சீனா மற்றும் எத்தியோப்பியா போன்ற நாடுகளை விட நேபாளத்தில் இருந்து மற்ற நாடுகளுக்கு தத்தெடுக்கப்படும் குழந்தைகளின் எண்ணிக்கை குறைவு தான். ஆனால் சமீப காலமாக இந்த எண்ணிக்கை படிப்படியாக அதிகரித்து வரு கிறது. இவர்களில் பலர் அமெரிக்கா, ஸ்பெயின், இத்தாலி, பிரான்ஸ் மற்றும் ஜேர்மனி போன்ற நாடுகளுக்கு செல்

(35ம் பக்கம் பார்க்க)

கிறார்கள்.

உலக அளவில் ஒரு நாட்டிலிருந்து மற்ற நாடுகளுக்கு குழந்தைகள் தத்தெடுக்கப்படுவதை கண்காணிக்கும் சர்வ தேச அமைப்பு தற்போது வெளியிட்டிருக்கும் வரைவு அறிக்கையில், நேபாளத்தில் குழந்தைகளை தத்தெடுப்பதற்கு கடைபிடிக்கப்படும் நடைமுறைகள் சர்வதேச தரத்தின் கீழ் அமையவில்லை என்று கூறியுள்ளது. நாடுகளுக்கிடையில் குழந்தைகள் தத்தெடுக்கப்படுவதை முறைப்படுத்துவதற்காக 1993ம் ஆண்டு உருவாக்கப்பட்ட ஹேக் ஒப்பந்தத்தில் நேபாளமும் கையொப்பமிட்டுள்ளது.

ஆனாலும் தத்து கொடுக்கப்படும் குழந்தையின் நன்மையை கருத்தில் கொள்ளும் வகையில் நேபாள அரசு செயற்படவில்லை என்றும், குழந்தைகள் பலவந்தமாக கடத்தப்படுவதையும், விற்பனை செய்யப்படுவதையும் பிறகு வெளிநாடுகளுக்கு கடத்தப்படுவதையும் நேபாள அரசாங்கம் தடுக்கத் தவறிவிட்டதாகவும் இந்த அமைப்பின் அறிக்கையில் கூறப்பட்டுள்ளது.

*அமெரிக்கா*

## கிழக்கில் வரலாறு காணாத பனிப்புயல்

அமெரிக்காவில் வரலாறு காணாத அளவுக்கு பனிப்புயல் பெய்து வருகிறது. குறிப்பாக அமெரிக்காவின் கிழக்கு கடற்கரை பகுதியில் கடுமையான பனிப்புயல் வீசுகிறது. மணிக்கு 90 கி.மீ. வேகத்தில் பனிப்புயல் காற்று வீசுகிறது. பென்சில்வேனியா, வர்ஜீனியா, மேரிலாண்டு, நியூஜெர்சி, ஓஹ்யோ, வடக்கு கரோலினா, டெலாவேர் ஆகிய மாநிலங்களில் பனிப்புயலால் கடுமையாகப் பாதிக்கப்பட்டுள்ளன. பனிப்புயல் காரணமாக அமெரிக்காவின் தலைநகரான வாஷிங்டன் மிகவும் பாதிக்கப்பட்டுள்ளது. ஜனாதிபதி ஒபாமாவின் வெள்ளை மாளிகையில் 10 அங்குல உயரத்துக்கு பனிகட்டி உறைந்து கிடக்கிறது. சில இடங்களில் 3 அடி உயரத்துக்கு பனி பெய்து



இருப்பதாகவும், இது வரலாறு காணாத அளவுக்கு இருப்பதாகவும் அமெரிக்கர்கள் தெரிவித்துள்ளனர். வாஷிங்டன் உட்பட பல்வேறு மாநிலங்களில் அவசரகாலநிலை பிரகடனப்படுத்தப்படவுள்ளது.

பனிப்புயல் காரணமாக வீதிகளில் 2 அடி உயரத்துக்கு பனி உறைந்து கிடக்கிறது. இதனால் பல்வேறு மாநிலங்களில் நூற்றுக்கணக்கான விபத்துக்கள் நடந்துள்ளன. இதுவரை இருவர் பலியானார்கள். தொடருந்து, விமான போக்குவரத்து பாதிக்கப்பட்டுள்ளன. வீடுகள் முழுவதும் உறைபனியால் மூழ்கிக்கிடக்கின்றன. இதனால் மக்கள் வெளியே வரமுடியாமல் வீடுகளுக்குள் முடங்கிக்கிடக்கின்றனர். அன்றாட வாழ்க்கை பாதிக்கப்பட்டுள்ளது. பல்வேறு இடங்களிலும் மின்சாரம் துண்டிக்கப்பட்டுள்ளது. கடுமையான பனிப்பொழிவு காரணமாக சில இடங்களில் வீதிகளில் வெடிப்பு ஏற்பட்டுள்ளது. இதைத்தொடர்ந்து பேருந்துகள் மற்றும் வாகன போக்குவரத்துக்கு தடை விதிக்கப்பட்டுள்ளது.

டெல்லஸ் விமான நிலையத்தில் கூரை இடிந்து விழுந்ததில் அந்த விமான நிலையம் தற்காலிகமாக மூடப்பட்டுள்ளது. விமான நிலையத்தில் நிறுத்தப்பட்டு இருந்த சில விமானங்கள் சேதம் அடைந்துள்ளன.

இதேவேளை, கடும் பனிப்புயலால் தொடர்ந்து 3 நாட்களுக்கு மேலாக அரசு அலுவலகங்கள், வியாபார நிலையங்கள், பாடசாலைகள் போக்குவரத்துகள் என அனைத்தும் மூடப்பட்டு முடங்கிப்போயுள்ளன. இதனால் பல கோடி டொலர்கள் இழப்பு ஏற்பட்டுள்ளதாக தெரிவிக்கப்படுகின்றது.

*சவுதி அரேபியா*

## வாகனங்களுடன் சென்ற கப்பல் கடத்தல்

தென்கொரியாவில் இருந்து வாகனங்களை ஏற்றிக்கொண்டு சவுதி அரேபியாவுக்கு புறப்பட்ட சரக்கு கப்பல் ஒன்றை சோமாலியா கடற்கொள்ளையர்கள் கடத்தியுள்ளனர். தென் கொரியாவில் உள்ள ஹண்டாய் நிறுவனத்தில் தயாரிக்கப்பட்ட கார்களை ஏற்றிக்கொண்டு கொரியாவுக்கு சொந்தமான ஒரு கப்பல் சவுதி அரேபியாவுக்கு புறப்பட்டது. 44 ஆயிரம் தொன் எடை கொண்ட இந்த கப்பலில், 2400 கார்கள் ஏற்றப்பட்டு இருந்தன. இந்த கப்பல் சவுதி அரேபியாவில் உள்ள ஜெட்டா துறைமுகத்தை நோக்கி பயணம் செய்தது. சோமாலியா கடற்கரையில் இருந்து 1000 கி.மீ. தொலைவில் இந்த கப்பல்



கடத்திய கப்பல்களை சோமாலிய கடற்கொள்ளையர்கள் தடுத்து வைத்திருக்கும் இடம்.

சென்றபோது, அதை கடற்கொள்ளைக்காரர்கள் கடத்தினார்கள்.

இந்த கப்பலுடன் அதில் பணியாற்றிய ஊழியர்களையும் அவர்கள் பிணைக்கைதிகளாக பிடித்து வைத்துள்ளனர். மொத்தம் உள்ள 25 பணியாளர்களில் 10 பேர் உக்ரைன் நாட்டினர். 8 பேர் பல்கேரியாவை சேர்ந்தவர்கள். மீதி 7 பேரில் இந்தியர்களும், ருமேனியர்களும் இருக்கிறார்கள். இந்த கப்பலை விடுவிப்பதற்கு கடற்கொள்ளைக்காரர்கள் 10 மில்லியன் டொலர்களை பணயத்தொகை கேட்டுள்ளனர். இந்நிலையில், கப்பலை விடுவிப்பது தொடர்பாக கடற் கொள்ளையர்களுடன் கப்பல் நிறுவனம் பேச்சுவார்த்தையை நடத்திவருகிறது.

*பிரித்தானியா*

## திறந்த வெளியில் தகனமாக இந்து நபருக்கு உரிமை

பிரித்தானியாவில் வசிக்கும், இந்து சமய நபர் ஒருவர், தான் இறந்த பிறகு திறந்த வெளியில் தகனம் செய்யப்படும் உரிமையைச் சட்டப்படி பெற்றுள்ளார். பிரித்தானியாவின் சட்ட விதிமுறைகளின் படி உடலங்களை எரியூட்டும் கூடங்களில் மட்டுமே தகனம் செய்ய முடியும். எனவே 71 வயதான



தேவாந்தர் காய் என்பவர், தான் இறந்த பிறகு தனது உடல் திறந்த வெளியில் தகனம் செய்யப்பட வேண்டும் என்று விடுத்த கோரிக்கையை அவரது உள்ளூராட்சி அதிகார சபை மறுத்துவிட்டது. எனினும் தனது முயற்சியை தேவாந்தர் காய் கைவிடவில்லை. வழக்குத் தொடர்ந்து வாதிட்டார். அவரது கோரிக்கையை உயர் நீதிமன்றம் தள்ளுபடி செய்தது. இதை எதிர்த்து அவர் மேன்முறையீடு செய்தார். ஒரு நல்ல மரணத்துக்கும், இறந்த பிறகு தனது ஆன்மா உடலில் இருந்து விடுபட்டுச் செல்லவும் திறந்த வெளி தகனம் மிகவும் அவசியம் என்று அவர் வாதிட்டார். அங்கு இந்து பாரம்பரியமுறைப்படி திறந்த வெளியில் தகனம் செய்ய அனுமதி கிடைத்தது. இது தொடர்பான சட்டத்தில் தெளிவைப் பெறவே தான் வழக்கை தொடுத்ததாக அவர் கூறினார்.

*சீனா*

## புலி எப்போதும் வீரத்துடனும், மிகுந்த பலத்துடனும் இருப்பதால் திருமணம் தள்ளிவைப்பு

பொருளாதார வளர்ச்சியில் முன்னிலை வகிக்கும் சீனாவில் தொடர்ந்து கொம்யூனிச ஆட்சி நடைபெற்று வந்தாலும், மூட நம்பிக்கைக்கு பஞ்சமே இல்லை எனலாம். வரும் புத்தாண்டில் திருமணம் செய்து கொள்ளப் போவதில்லை என பெரும்பாலானவர்கள் தெரிவித்துள்ளனர். காரணம் புலி ஆண்டு புருசனுக்கு ஆகாதாம். சீனாவில் ஒவ்வொரு ஆண்டும் ஒரு விலங்கின் பெயரால் அழைக்கப்படுகிறது. 12 விலங்குகளின் பெயர் மாறி மாறி வரும் ஒவ்வொரு புத்தாண்டுக்கும் ஒரு நம்பிக்கையை பாரம்பரியமாக கடைபிடித்து வருகின்றனர்.

திருமணம் செய்து கொள்வதற்கு, குழந்தை பெற்றுக் கொள்வதற்கு, தொழில் தொடங்குவதற்கு என ஒவ்வொன்றுக்கும் ஒரு ஆண்டை சிறந்த ஆண்டாக கடைபிடித்து வருகின்றனர். இத்தகைய நம்பிக்கை பிரபலமடைந்த பிறகுதான் பொருளாதார சீரமைப்பு நடவடிக்கைகள் 1970களில் தொடங்கியது எனலாம்.

வரும் 14ம் திகதி பிறக்க உள்ள புலி ஆண்டில் திருமணம் செய்து கொள்ளக்கூடாது என்பது அவர்களது நம்பிக்கை. புலி ஆண்டில் திருமணம் செய்து கொண்டால் கணவரது உயிருக்கு ஆபத்து ஏற்படும் என்றும், இதனால் அடுத்த ஆண்டில் திருமணம் செய்து கொள்வதை தவிர்க்கப் போவதாகவும் சீன மக்கள் தெரிவித்துள்ளனர். 'என்னுடைய பெற்றோருக்கு மூட நம்பிக்கை கிடையாது. எனக்கும் இல்லை. ஆனாலும் திருமணம் செய்து கொள்வதற்கு புலி ஆண்டு உகந்தது அல்ல. அவ்வாறு திருமணம் செய்து கொண்டால் கணவர் உயிரிழக்க நேரிடும்.' என பல்கலைக்கழக மாணவி ஜாய்ஸ் லின் தெரிவித்துள்ளார்.

புலி ஆண்டில் குழந்தை பெற்றுக்கொள்வதுகூட நல்லதல்ல. அதுபோல், மதிய நேரத்தில் பிறக்கும் குழந்தையை 'பசியான புலி'யோடு ஒப்பிடுகிறார்கள். இதனால் அந்த குழந்தை தனது வாழ்நாளில் சாப்பாடு கிடைக்காமல் திண்டாடும் என அன்ஹுய் மாநிலத்தைச் சேர்ந்த ஒரு பிரிவினர் கருதுகின்றனர். அதேசமயம், புத்தாண்டில் பொருளாதார வளர்ச்சி, பங்குச் சந்தை வளர்ச்சி ஆகியவை மிகவும் சிறப்பாக இருக்கும் என்பது அவர்களது நம்பிக்கை. புலி எப்போதும் வீரத்துடனும், மிகுந்த பலத்துடன் இருப்பதே இதற்குக் காரணம் என ஹாங்காங் பெங் சூய் வல்லுநர் ஒருவர் தெரிவித்தார்.

ஈழமுரசு
EELAMURASU WEEKLY

நிர்வாகி
நிசாந்தன்

பிரதம ஆசிரியர்
ரஞ்சன்

ஆசிரியர் குழு
ஐ.சண்முகநாதன்
ஈசன்
செல்வராஜா
சிவா பரஞ்சோதி

அலுவலக நிர்வாகம்
இ.கந்தசாமி

வரைகலை
அனு கிராபிக்ஸ்

அலுவலகம்
2625 EGLINTON AVE EAST #2
SCARBOROUGH ,ON.M1K 2S2
தொலைபேசி / Telephone
416-291-7474
Cell:416•857•3941
தொலைநகல்/ Fax
416•291•7472
மின் அஞ்சல்/ Email
Eelamurasucanada@yahoo.com

அனைத்துலக அலுவலகங்கள்

பிரான்ஸ்
00 31 40 05 95 15

பிரித்தானியா
0845 8687 980

சுவிஸ்
079 828 6871

ஜேர்மனி
0208 205 99 103

இத்தாலி
091 6824056

டென்மார்க்
86 336352

நோர்வே
22 425 527

நெதர்லாந்து
076 5425804

அவுஸ்திரேலியா
61 3 8802 8368



# அவசரகாலச்சட்ட நீடிப்பு, பொதுத்தேர்தல் வன்முறைகளின் ஆரம்பம்

## சர்வதேச ஊடகம் வர்ணிப்பு

சிறீலங்கா அரசினால் தற்போது எதிர்த்தரப்புக்கு எதிராக மேற்கொள்ளப்படும் வன்முறைகள் நாடாளுமன்ற தேர்தல்களுக்கு முன்னர் நடைபெறும் வன்முறைகளின் ஆரம்பமாகவே கருதப்படுகின்றது. அவசரகாலச் சட்ட நீடிப்பும் தேர்தல் வன்முறைகளை மேலும் அதிகரிக்கலாம் என ஏ.எஃப்.பி செய்தி நிறுவனம் தெரிவித்துள்ளது.

அது மேலும் தெரிவித்துள்ளதாவது, கடந்த வெள்ளிக்கிழமை (5) சிறீலங்காவில் அவசரகாலச்சட்டம் மேலும் ஒரு மாதம் நீடிக்கப்பட்டுள்ளது. ஆனால் அது மிகப்பெரும் விசனங்களை பல மட்டங்களில் தோற்றுவித்துள்ளது. எதிர்வரும் ஏப்பிரல் மாதம் நடைபெறவுள்ள நாடாளுமன்ற தேர்தலில் அரசுக்கு எதிரானவர்களை தடுத்துவைப்பதற்கு அரசிற்கு இது அதிகாரங்களை வழங்கும் என தனியார் தேர்தல் கண்காணிப்பு அமைப்பான நீதியானதும், சுயாதீனமானதுமான தேர்தல் மக்கள் நடவடிக்கை குழு தெரிவித்துள்ளது.

கடந்த மாதம் நடைபெற்ற அரச தலைவர் தேர்தலின் போது இடம்பெற்ற வன்முறைகளுக்கும் அவசரகாலச்சட்டமே காரணம். அவசரகாலச்சட்டம் நடைமுறைப்படுத்தப்படுவது தேர்தல் பிரச்சாரங்களை அதிகம் பாதித்துவருகின்றது. அதனை தனது அரசியல் எதிரிகளுக்கு எதிராக அரசு பயன்படுத்தமாட்டாது என்பது தொடர்பில் எந்த உத்தரவாதமும் இல்லை என அதன் நிறைவேற்றுப் பணிப்பாளர் றோகன ஹெட்டியாராட்சி தெரிவித்துள்ளார்.

சிறீலங்கா அரசு சிவில் நிர்வாகத்தை ஏற்படுத்த வேண்டும் என அனைத்துலக சமூகம் தெரிவித்து வருகையில், சிறீலங்கா அரசு கடந்த வெள்ளிக்கிழமை அவசரகாலச்சட்டத்தை மேலும் ஒரு மாதம் நீடித்துள்ளது. இந்த சட்டம் ஒவ்வொரு மாதமும் நாடாளுமன்றத்தில் நீடிக்கப்படுவதுண்டு.

சிறீலங்காவுக்கு எதிரான எதிரிகள் ஒன்று சேர்ந்து வருவதால் அவசரகாலச்சட்டம் தேவையானது என சிறீலங்காவின் பிரதமர் ரட்ணசிறீ விக்கிரமநாயக்கா தெரிவித்துள்ளார். இந்த சட்டங்களின் மூலம் சந்தேக நபர்களை கைது செய்து நீதிமன்றத்தின் முன் நிறுத்தாது தடுப்புக்காவலில் வைக்க முடியும். இரு மாதங்களுக்கு முன்னர் கலைக்கப்படும் நாடாளுமன்றத்திற்கான தேர்தல் எதிர்வரும் ஏப்பிரல் மாதம் நடைபெறவுள்ளது.

சிறீலங்கா அரசு அவசரகாலச் சட்டங்களை நீக்குவதுடன், எதிர்க்கட்சிகளுக்கு எதிரான வன்முறைகளையும் நிறுத்த வேண்டும் என நியூயோர்க்கை தளமாக கொண்ட மனித உரிமைகள் கண்காணிப்பகம் தெரிவித்துள்ளது. தற்போது எதிர்த்தரப்புக்கு எதிராக மேற்கொள்ளப்படும் வன்முறைகள் நாடாளுமன்ற தேர்தல்களுக்கு முன்னர் நடைபெறும் வன்முறைகளின் ஆரம்பமாகவே தான் கருதுவதாக மனித உரிமைகள் கண்காணிப்பத்தின் ஆசிய பிராந்திய பணிப்பாளர் பிராட் அடம்ஸ் தெரிவித்துள்ளார்.

பொதுமக்களை அடக்குமுறைக்குள் தள்ளும் அரசின் நடவடிக்கைகள் அரசுடன் மேற்கொள்ளப்படும் எதிர்கால உறவுகளை பாதிக்கும் என்பதை சிறீலங்காவின் நட்பு நாடுகள் சிறீலங்கா அரசுக்கு தெரிவிக்க வேண்டும் என அவர் மேலும் தெரிவித்துள்ளார். அவசரகாலச் சட்டத்தை பயன்படுத்தி பெருமளவான எதிர்க்கட்சி ஆதரவாளர்களை அரசு தடுத்து வைத்துள்ளது. விடுதலைப்புலிகளை கடந்த வருடம் அரசு முறியடித்துள்ள போதும் அவர்கள் மீண்டும் வருவார்கள் என தாம் நம்புவதாக சிறீலங்கா பிரதமர் தெரிவித்துள்ளார். ஆனால் அது போலியானது என எதிர்க்கட்சிகள் தெரிவித்துள்ளன. அரசு எதிக்கட்சிகளை அடக்குவதற்கே அவசரகாலச்சட்டத்தை பயன்படுத்துவதாக அவை குற்றம் சுமத்தியுள்ளன என அதில் தெரிவிக்கப்பட்டுள்ளது.




இராணுவ காவல்துறையினரால் கைது செய்து தடுத்து வைக்கப்பட்டு விசாரணைக்கு உட்படுத்தப்பட்டு வருகின்ற முன்னாள் இராணுவ தளபதி ஜெனரல் சரத் பொன்சேகா இராணுவ காவல்துறையினரால் வழங்கப்பட்ட நீரையோ, ஆகாரத்தையோ உட்கொள்ளாமல் 24 மணித்தியாலங்கள் பட்டினியில் இருந்துள்ளார். ஆறு மணித்தியாலங்களுக்கு ஒருதடவை உட்கொள்ளவேண்டிய மாத்திரைகளையும் உட்கொள்ளாத அவர் தனது மனைவி அனோமா கொண்டுவந்திருந்த உணவு மற்றும் மாத்திரைகளை உட்கொண்டுள்ளார். அத்துடன், அவருடன் மூன்று மணித்தியாலங்கள் உரையாடியுள்ளார்.

இராணுவ இரகசியங்களை வெளியிட்டமை மற்றும் ஜனாதிபதியைக் கொலை செய்வதற்கு சதித்திட்டம் தீட்டியமை உள்ளிட்ட குற்றச்சாட்டுகளின் அடிப்படையில் இராணுவ காவல்துறையின்ரால் கடந்த திங்கட்கிழமை இரவு கைதுசெய்யப்பட்ட அவர் கொழும்பு கோட்டையிலுள்ள கடற்படையின் கனிஷ்ட பிரிவு அதிகாரிகளின் குடிமனைத் தொகுதியில் தடுத்து வைக்கப்பட்டுள்ளார்.

கடற்படையின் கனிஷ்ட பிரிவு அதிகாரிகளின் குடிமனைத் தொகுதியின் மூன்றாவது மாடியில் பலத்த பாதுகாப்பிற்கு மத்தியில் தடுத்து வைக்கப்பட்டுள்ள ஜெனரல் சரத் பொன்சேகாவை அவரது மனைவி அனோமா பொன்சேகாவும் ஜனாதிபதி சட்டத்தரணியும் ஐ.தே.கவின் உறுப்பினரும் முன்னாள் நாடாளுமன்ற உறுப்பினருமான விஜேதாச ராஜபக்சவும் செவ்வாய்க்கிழமை மாலை பாதுகாப்பு அமைச்சின் அனுமதியுடன் சந்தித்து உரையாடியுள்ளனர்.

ஜெனரல் பொன்சேகாவை பார்வையிடுவதற்கு அவரது குடும்ப அங்கத்தினருக்கு மட்டுமே அனுமதியளிக்கப்படும் என்று தெரிவிக்கப்பட்டுள்ள நிலையிலும் பாதுகாப்பு அமைச்சு அனுமதி வழங்குகின்ற நேரத்தில் மட்டுமே அவரை சந்தித்து கலந்துரையாட முடியும்.

தற்கொலைக் குண்டுத் தாக்குதலில் படுகாயமடைந்ததன் பின்னர், அவருக்கு அளிக்கப்பட்ட சத்திர சிகிச்சையையடுத்து ஆறு மணித்தியாலத்திற்கு ஒரு தடவை மருந்தை உட்கொள்ளுமாறும் இல்லையே உடல் நிலையில் பாதிப்புகள் ஏற்படும் என்று வைத்தியர்கள் அவருக்கு ஆலோசனை வழங்கியிருந்தனர். அந்த ஆலோசனையின் பிரகாரமே அவர் மருந்து மாத்திரைகளை உட்கொண்டு வந்துள்ளார்.

ஜெனரலைச் சந்தித்த விஜேதாச ராஜபக்ச ஊடகங்களுக்கு கருத்து தெரிவிக்கையில், எவ்விதமான அச்சமுமின்றி இருக்கின்ற அவர், தன்னை எவரும் இதுவரையிலும் துன்புறுத்தவில்லை என்று தெரிவித்தார். ஜெனரல் பொன்சேகா இராணுவ காவல்துறையினர் 10 பேரின் பலத்த கண்காணிப்பின் கீழ் தடுத்து வைக்கப்பட்டிருப்பதுடன் அவரை மீண்டும் சந்திக்க வேண்டுமாயின் மற்றுமொரு தடவை பாதுகாப்பு அமைச்சின் அனுமதியைப் பெற்றுக்கொள்ள வேண்டும் எனவும் அங்கிருந்த இராணுவ அதிகாரியொருவர் தெரிவித்தார்' என்றார்.

சிறீலங்கா இராணுவத்தின் தளபதியாக இருந்து படையை வழி நடத்தியவருக்கே இந்த நிலை என்றால் சிறீலங்கா அழிக்கத் துடிக்கும் தமிழ் மக்களின் நிலை என்னவென்று இந்த உலகம் எண்ணிப்பார்க்க வேண்டும்.

# மரண அறிவித்தல்

## திருமதி மேரிராணி பாக்கியரஞ்சிதம் நீக்கிலாப்பிள்ளை (பேபி)



யாழ்ப்பாணம் ஈச்சமோட்டையை பிறப்பிடமாகவும், வதிவிடமாகவும் கொண்டு சிறிது காலம் பெரியகடை மன்னாரில் வாழ்ந்தவரும் தற்பொழுது கனடா ஸ்காபுரோவில் வசித்து வந்தவருமாகிய திருமதி நீக்கிலாப்பிள்ளை மேரி ராணி பாக்கியரஞ்சிதம் (பேபி) அவர்கள் 14-02-2010 ஞாயிற்றுக்கிழமை கனடா ஸ்காபுரோவில் காலமானார்.

அன்னார் காலஞ்சென்றவர்களான சாமுவேல் முத்து கந்தையா (முன்னாள் புகையிரத பிரதம பாதுகாவலர்) மார்கிரட் பாக்கியம் தம்பதிகளின் சிரேஷ்ட புதல்வியும் காலஞ்சென்றவர்களான பிலிப் செபஸ்தி, பாக்கியம் தம்பதிகளின் மருமகளும்,

காலஞ்சென்ற நீக்கிலாப்பிள்ளையின் (ஆசிரியர் - புனித சவேரியர் கல்லூரி, மன்னார்) அன்பு மனைவியும், காலஞ்சென்ற அருட்பணி பாக்கிய ரஞ்சிற் (மன்னார் மறைமாவட்டம்), பாக்கிய ரெயினோல்ட் (ரெஜி) (கனடா) ஆகியோரின் பாசமிகு தாயாரும், மேரி ரோகினியின் அன்பு மாமியும், அமிஷா, நிதிஷாவின் ஆசை அப்பம்மாவும்,

காலஞ்சென்றவர்களான பாக்கியநேசர், பாக்கியஜீவர், பாக்கியஜெயம், மற்றும் பாக்கியராஜா (பிரான்சு) புஷ்பதேவி, பாக்கியகுமார், பாக்கியதாசன் (இலங்கை) ஆகியோரின் அன்புச் சகோதரியும், காலஞ்சென்றவர்களான பகவதி, அந்தோனிப்பிள்ளை, பஸ்டியாம்பிள்ளை, மற்றும் லூர்துமேரி, தணிகாசலம், திரேசம்மா, சந்தியோகுதாசன், சந்தியாப்பிள்ளை, சுவாம்பிள்ளை ஆகியோரின் மைத்துனியும் ஆவார்.

அன்னாரின் பூதவுடல் 19-02-2010 வெள்ளிக்கிழமை மாலை 5.00 மணி முதல் 9.00 மணி வரையும் 20-02-2010 சனிக்கிழமை காலை 9.00 மணி தொடக்கம் 10.30 மணி வரையும் **Highland Funeral Home (3280 Sheppard Ave. E – Sheppard and Warden)** இல் பார்வைக்காக வைக்கப்பட்டு பின்னர் 11.00 மணிக்கு **Epiphany of Our Lord ( 3200 Pharmacy Ave.)** கத்தோலிக்க தேவாலயத்தில் இரங்கல் திருப்பலி ஒப்புக்கொடுக்கப்பட்டு இறுதி ஆராதனை **Forest Lawn Crematary, 4570 Young St. (Younge/ 401)** இல் நடைபெறும் என்பதனை உற்றார்கள், உறவினர்கள், நண்பர்களுக்கு அறியத்தருகின்றோம்.

அன்னையின் மடியில் 20-11-1936



ஆண்டவன் மடியில் 14-02-2010

தகவல்:- பாக்கிய றெஜினோல்ட் (மகன்) - கனடா
தொலைபேசி:- 416-568-7311 மின்னஞ்சல்:- reginold@hotmail.com

# மரண அறிவித்தல்

## திரு. ஆறுமுகம் யோகநாதன்



யாழ்ப்பாணம், காரைநகரைப் பிறப்பிடமாகவும் கனடாவை வதிவிடமாகவும் கொண்ட திரு. ஆறுமுகம் யோகநாதன் (இளைப்பாறிய தபால் அதிபர் - மன்னார்) அவர்கள் 15-02-2010 அன்று இறைவனடி சேர்ந்தார்

அன்னார் காலஞ்சென்ற ஆறுமுகம் - செல்லம்மா தம்பதிகளின் பாசமிகு புதல்வனும், காலஞ்சென்ற திரு. திருமதி யோசப் தம்பதிகளின் மருமகனும், RITA (இளைப்பாறிய ST. XAVIER'S மன்னர், ஆசிரியை) அவர்களின் அன்புக் கணவரும், யூட் சாந்திராஜ், ஷிறாணி, ஷாமினி, சத்தியராஜ், சற்குணறாஜ் ஆகியோரின் அன்புத் தந்தையும்,

JACOLINE, NIMAL, ROSHAN, MAURREN, SUBAJINI ஆகியோரின் அன்புமிகு மாமனாரும்

Shinduja, Tony, Sebastian, Marino, Marco, Judeto, Mathew, Marian, Johana ஆகியோரின் அன்புப் பேரனாரும்

காலஞ்சென்ற யோகாம்பிகை, காலஞ்சென்ற சந்திராதேவி, அம்பிகை, பாலசுப்பிரமணியம், தவமணி, நல்லநாதன் ஆகியோரின் அன்புச் சகோதரருமாவார்.

அன்னாரின் பூதவுடல் DE MARLO FUNERAL VISITATION CENTRE, 8003 WESTON ROAD, WOODBRIDGE, ONT., L4L 1A6 இல் பார்வைக்காக, வெள்ளிக்கிழமை 19-02-2010 மாலை 6:00 மணிமுதல் 9:00 மணி வரை வைக்கப்பட்டு சனிக்கிழமை 20-02-2010 காலை 9:00 மணிக்கு IMMACULATE CONCEPTION CHURCH, 300, ANSLEY GROVE ROAD, WOODBRIDGE, ONT, L4L 3W4 இரங்கல் பூசை ஒப்புக் கொடுக்கப்பட்டு QUEEN OF HEAVEN CEMETRY, 7300 HIGHWAY 27, WOODBRIDGE, ON. L4L 1A5 இல் நல்லடக்கம் செய்யப்படும்

உற்றார், உறவினர், நண்பர்கள் அனைவரும் இவ்வறிவித்தலை ஏற்றுக்கொள்ளுமாறு தாழ்மையாகக் கேட்டுக்கொள்ளப்படுகின்றனர்.

பிறப்பு 22-04-1941



இறப்பு 15-02-2010

தொடர்புகளுக்கு: 905-303-9412, 905-303-9589
208-5501802 (LONDON - UK)

## மகிந்தவின் அரசி....

கூறப்பட்ட அதிகாரிகள் இராணுவத்தில் இருந்து விலக்கப்பட்டனர்.

எனினும் அவர்கள் மீதான விசாரணைகள் நடத்தப்பட்டு அவர்கள் தமது வாதங்களை கூற அனுமதிக்கப்பட்டனர். அவர்கள் தமது தவறுகளை மறுத்த போதும் சந்திரிகாவின் உத்தரவுகளுக்கு அமைய அவர்கள் விலக்கப்பட்டனர்.

அப்போது விலக்கப்பட்ட இராணுவ அதிகாரிகள் தமது வாகனங்களை ஒரு மாதம் பயன்படுத்தவும், இராணுவ விடுதிகளில் தங்கியிருப்பதற்கு அவர்களுக்கு 3 மாதம் அவகாசமும் வழங்கப்பட்டிருந்தன.

ஆனால் தற்போதைய நடவடிக்கைகள் மிக வேகமாக நடைபெற்றுவருவதுடன், அரசியல் பழி வாங்கல்களும், அச்சமுமே அதற்கான காரணங்களாக கூறப்படுகின்றன.

அரசியல் காரணங்களுக்காக பெருமளவான அதிகாரிகள் விலக்கப்பட்டுள்ள அதேசமயம், ஜெனரல் பொன்சேகாவின் விவகாரத்தில் அரசு அவர் மீது பின்வரும் பிரதான குற்றச்சாட்டுக்களை முன்வைக்க முனைந்துள்ளது.

♦ சீருடையுடன் அரசியல் பணிகளில் ஈடுபட்டது.
♦ அரச தலைவருக்கு எதிராக சதி செய்ய முற்பட்டமை.
♦ இராணுவத்தில் இருந்து தப்பிசென்ற 1,500 இற்கு மேற்பட்டவர்களுக்கு புகலிடம் அளித்தமை.
♦ ஆயுதக் கொள்வனவில் ஊழல்கள் புரிந்தமை.

இந்த குற்றச்சாட்டுக்களின் அடிப்படையில் பொன்சேகா மீதான நடவடிக்கைக்கு அரசு தயாராக வருகின்றது. ஆனால் அதன் முக்கிய நோக்கம் வேறு. அதாவது எதிர்க்கட்சிகளை ஒடுக்குவதும், அரசியலில் இருந்து பொன்சேகாவை அகற்றுவதுமே யாகும்.

அதன் மூலம் சிறீலங்காவின் நாடாளுமன்றத் தேர்தலில் வெற்றிபெற்று மகிந்த தனது சொந்த நாடாளுமன்றத்தை உருவாக்க முனைகின்றார் என்ற குற்றச்சாட்டுக்கள் எழுந்துள்ளன.

ஆனால் எதிர்க்கட்சிகள் முற்றாக முடக்கப்பட்ட நிலையில், சிறீலங்கா சீனாவின் மற்றுமொரு பர்மாவாக மாற்றம் பெறுவதை மேற்குலகம் அனுமதிக்கப் போகின்றதா? என்பதில் தான் பொன்சேகாவின் எதிர்காலம் தங்கியுள்ளது.

மேலும் இராணுவத்திற்குள் முரண்பாடுகளை தோற்றுவித்துள்ள மகிந்தவின் புதிய அரசியல் நகர்வு தென்னிலங்கையின் அரசியலின் உறுதித்தன்மைக்கு நீண்டகாலத்திற்கு அச்சுறுத்தலாகவே அமையும் என்பதையும் நாம் மறுக்க முடியாது.



வட்டுக்கோட்டைத் தீர்மானத்தின் அவசியமும் நாடுகடந்த அரசின் பின்னணியும்

அடுத்த இதழில் தொடரும்...






**Ganesh Thangarajah**
Real Estate Broker
**416-994-9046**




Busy Greek Restaurant for sale in Guelph




Tamil grocery store in Maple




Greek Restaurant for sale In Maple




Whitby 2500 sqf
4 Bdr., Detached 2-Storey




Mavis / Derry
3 Bdr., Semi house




Bovaird/Hwy 10
3 Bdr., Twonhouse




9th line / Steeles
4 Bdr., 3 y old Detached house




Morningside /Old Finch
4 Bdr., Detached 2-Storey




In Maple
3 Bdr., Semi-Detached 2-Storey




Kennedy / Eglinton (Mississagua)
3 Bdr., 2-Storey







Kingston & Eglinton
2+1 Bdr., Condo Apt




**HomeLife Today Realty Ltd., Brokerage*** 31 Progress Ave., Suite 210, Toronto, ON M1P 4S6 Tel: 416-298-3200



# நந்தா உணவகம்

## NANTHA RESTAURANT

## இப்பொழுது மூன்று இடங்களில்

தாயகச் சுவை சொட்டும்
உணவுகளை தூய்மையாகவும்
மலிவாகவும் உண்டு மகிழ
இன்றே வாருங்கள்





| BRIMLEY & STEELES | KENNEDY & FINCH | KIPPLING & STEELES |
|---|---|---|
| 4915, STEELES AVE. E | 2901, KENNEDY ROAD | 5010, STEELES AVE. W |

CALL
**416-NANTHA 1**
**(416-626-8421)**

## Thinking of Buying or Selling Real Estate
## வீடு, வியாபாரம் வாங்க, விற்க....



RED CARPET®
Royal Realty Ltd., Brokerage
® INDEPENDENTLY OWNED AND OPERATED
Real Estate Service



3 Bedrooms, 3 Washrooms
Low Maintenance Fee Condo



4 Bedrooms, 3 Washrooms
Walk To Public Transit, School



4 Bedrooms, 3 Washrooms
Pot Lights In Family Room



2 Bedrooms, 1 Washroom
Demand Location



1 Bedroom, 1 Washroom
Investment Potential



3+1 Bedrooms, 2 Washrooms
Well Maintained Large Unit



3 Bedrooms, 4 Washrooms
Close To Shopping, Bank, Schools



3+1 Bedrooms, 2 Washrooms
*1350Sqft,*2 Parking Spots



2 Bedrooms, 2 Washrooms
Approx 1077 Sq. Ft. With Balcony



1+1 Bedrooms, 2 Washroom
Well Maintained Unit



3 Bedrooms, 3 Washrooms
Immaculate Mattamy Home



4+1 Bedrooms, 4 Washrooms
Over 3000 Sqft With Breaktaking View

அனுபவம்! அறிவு!
திறமை! பொறுமை!

22 வருடங்களாக
இத்துறையில் முன்னணியில்........




Looking for a New Real Estate Career
- Free Real Estate Classes
- Commission up to 100%
- Help & Guidance for newly licensed Agents
- Regular Sales Training from Experts

*Join the Winning Real Estate Team*

Bus: 416-284-5555
Dir: 416-616-7278
880 Ellesmere Road,Suite 204, Toronto, ON.